# எழுத்தாளர்கள் பத்திரிகைகள்

## அன்றும் இன்றும்

வல்லிக்கண்ணன்

**.சோலைத் தேனீ.**

சோலை இயக்கத் தலைமையகம்
கிறிஸ்டியான்பேட்டை — காட்பாடி 632007

SOLAI THENI

SOLAI RESOURCE CENTRE
FOR
KNOWLEDGE TRANSFER IN PEOPLE'S LANGUAGE

# WRITERS & JOURNALS

## — YESTERDAY & TODAY

BY
VALLIKKANNAN

First Edition 1986

விலை ரூ. 8

விற்பனை உரிமை
பாரதி சோலை டிரஸ்ட்
காட்பாடி – 632 007

# முன்னுரை

முதலில் நான் வாசகன். அப்புறம் தான் எழுத்தாளன்.

1933 முதல், எனக்குக் கிடைக்கும் பத்திரிகைகள் புத்தகங்கள் அனைத்தையும் படிப்பதில் நான் ஆர்வம் கொண்டேன். இப்போதும் படித்துக் கொண்டிருக்கிறேன்.

நாற்பத்து ஏழு வருடங்களாக நான் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

'படிப்பதில் உங்களுக்கு அலுப்பு ஏற்படவில்லையா?' 'எழுதுவதில் உங்களுக்கு சலிப்புத்தட்டவில்லையா?' — இப்படி அவ்வப்போது என்னை கேட்கிறார்கள், பெரிய படைப்பாளிகளும் இளைய நண்பர்களும்.

படிப்பது எனக்குப் பொழுது போக்கு அல்ல. எழுதுவது எனக்கு வேலை இல்லை.

படிப்பது - எழுதுவது - ஊர் சுற்றுவது என்பதை ஒரு வாழ்க்கை முறையாக வரித்துக் கொண்டவன் நான்.

ஒருவனுடைய வாழ்க்கையே அவனுக்கு அலுக்குமானால், சலித்துப் போகுமானால், அப்புறம் அவன் வாழத் தகுதியற்றவன் ஆவான். மரணம் தான் அவனுக்கு விடுதலை அமைதி — அளிக்க முடியும்.

நான் தேர்ந்து கொண்ட வாழ்க்கை எனக்கு சந்தோஷங்களையே தந்து வருகிறது. எதையும் நான் அனுபவமாகவே கொள்கிறேன். ஏமாற்றங்களைக் கூட ஏமாற்றங்களாக நான் கருதுவது இல்லை. அவற்றையும் அனுபவங்களாக ஏற்று மகிழ்கிறேன். அவையும் எனக்கு உண்மைகளை உணர்த்தும் செயல்களே ஆகும்.

எனது வாழ்க்கை அனுபவத்தில், நான் கண்டறிந்த உண்மைகளை எல்லாம் எழுத்தில் பதிவு செய்ய வேண்டும்; அவை மற்றவர்களுக்கு எவ்வளவோ அறிவிக்கும் என்று பலரும் என்னிடம் கூறுகிறார்கள், நேரிலும், கடிதங்கள் மூலமும்.

அதிலும், ' வல்லிக்கண்ணன் போராட்டங்கள் ' என்ற புத்தகம் வெளி வந்த பிறகு, எனது அனுபவங்களையும், அவை உணர்த்திய — உணர்த்துகிற — எண்ணங்கள், சிந்தனைகளையும் நான் எழுத்தில் பதிவு செய்தாக வேண்டும், அது என் கடமையும் கூட என்று வலியுறுத்துகிற கடிதங்கள் எனக்கு வந்து கொண்டேயிருக்கின்றன.

என் இனிய நண்பர், சோலை இயக்க கௌரவ இயக்குநர் திரு. ஆர். டி. ராஜன் அவர்கள், பத்திரிகைகள், எழுத்தாளர்கள் பற்றி நான் அறிந்த உண்மைகளை எழுதித்தர வேண்டும் என்று கோரினார்.

அதற்கிணங்க, 'தமிழ்ப் பத்திரிகைகள் - அன்றும் — இன்றும்' 'எழுத்தாளர்களும் பத்திரிகைகளும்' ஆகிய கட்டுரைகளை எழுதியுள்ளேன்.

தமிழ்ப் பத்திரிகைகளின் வரலாற்றையும், புத்தகப் பிரசுரம் மற்றும் எழுத்தாளர்கள் நிலைமைகளையும் புரிந்து கொள்ள உதவும் அவை.

இது நூல் வடிவம் பெறுவதற்குத் துணைபுரிந்த நண்பர் ஆர். டி. ராஜன் அவர்களுக்கும், அழகான முறையில் அச்சிட்டு புத்தகமாக வெளியிடும் சோலை இயக்கத்திற்கும் என் நன்றி.

2. 10. 86 வல்லிக்கண்ணன்



# 1

அறிந்து கொள்ள வேண்டும் எனும் அவா மனிதருக்கு இயல்பானது.

தம்மைச் சுற்றிலும் — வீதிகளில், ஊரில், இதர இடங்களில், நாட்டில், உலகத்தில் - என்ன நடந்தது, நடந்து கொண்டிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆசை பொதுவாக எல்லோருக்கும் இருக்கிறது.

இந்த அடிப்படை உணர்வை திருப்தி செய்வதற்குப் பத்திரிகைகள் உதவுகின்றன.

ஆதியில், வெறும் செய்திகளை மட்டுமே சேகரம் செய்து தந்து கொண்டிருந்த பத்திரிகைகள், பின்னர் அச்செய்திகள் மீது எழுகிற தங்கள் (பத்திரிகை ஆசிரியரின், மற்றும் பத்திரிகை நடத்துகிறவர்களின்) அபிப்பிராயங்களை அழுத்தமாக அறிவிக்க முன்வந்தன.

இதன்மூலம், வாசகர்கள் மத்தியில் தாக்கம் ஏற்படுத்தி, தங்களுக்கு சாதகமான எண்ணங்களை வளர்ப்பதற்கு பத்திரிகைகள் நல்ல சாதனங்கள் ஆகக்கூடும் என்ற நிலை உருவாயிற்று.

மக்களிடையே பத்திரிகை படிக்கும் பழக்கம் வளர வளர, அவர்களுக்கு வெறும் செய்திகள் மட்டுமே போதுமானதாக இருக்கவில்லை என்று தோன்றியது. ஆகவே அரசியல், சமூக

இயல், வரலாறு, பொருளாதாரம், வாணிபம், சாதனை புரிந்தவர்களது சரிதை, பிரயாண அனுபவங்கள், கலைகள் போன்ற பல அம்சங்களையும் - பல்வேறு ருசிகளுக்கும் ஏற்ற பலவிதமான விஷயங்களையும் - பத்திரிகைகள் தரவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அத்துடன், வாசகர்களை குறையாத எண்ணிக்கையில் வைத்துக்கொள்வதற்காகவும் - வாசகர்களின் எண்ணிக்கையை மேலும் பெருக்குவதற்காகவும், - கதைகள் பத்திரிகைகளில் இடம் பெறலாயின. இந்த நோக்கத்திற்குத் 'தொடர்கதை'கள் மிகுதியும் உதவக்கூடும் என்பதால், ஒவ்வொரு பத்திரிகையும் (நாளிதழ் கூட) கதைச்சுவை நிறைந்த தொடர்கதையை இன்றியமையாத அம்சம் ஆக்கிக் கொண்டது.

வாசகர் பெருக்கமும், வாசகர்களின் ருசிகளும், படிப்பு ஆர்வமும் அதிகரிக்கவும், செய்திப் பத்திரிகைகளோடு, பல விதமான சஞ்சிகைகளும் அதிகம் அதிகமாகத் தோன்றி வளர்வது சாத்தியம் ஆயிற்று.

ஆழ்ந்த கல்வி மூலம் அறிவொளி பெற்றவர்களும், சிந்தனைத் திறனை வளர்த்துக் கொண்டவர்களும், வாழ்க்கை பற்றிய உண்மையைத் தேட முயன்றவர்களும், சமகால மனித வாழ்வில், சமூக அமைப்பில், நீடித்து நிலவுகிற குறைபாடுகளை உணரத் தவறவில்லை.

மனிதர்கள் சந்தோஷமாக, வளத்தோடு, வாழ வேண்டும் என்றுதான் எல்லோரும் விரும்புகிறார்கள். ஆனால், மனித வாழ்க்கை சந்தோஷம் நிறைந்ததாக இல்லை. அப்படி வாழ்வதற்கு சமூக அமைப்பு முறைகளும், பொருளாதாரம் மற்றும் அரசியல் நிலைமைகளும் துணைபுரியவில்லை. இதை

உணர்ந்தவர்கள் - உணர்கிறவர்கள்-மக்களுக்கு அவர்களுடைய உண்மை நிலையை உணர்த்தி, அறிவு விழிப்பு ஏற்படுத்தி, அவர்களையும் சிந்திக்கத் தூண்டி, தங்களுடைய அவல நிலை நீங்கவும் சமூகம் மேம்பாடு அடையவும் செயல் புரியச் செய்ய வேண்டும் என்று சிந்தனையாளர்களும், தலைவர்களும், அறிஞர்களும் தாங்கள் கண்ட உண்மைகளை எடுத்துச் சொல்வதற்கு பத்திரிகைகளைப் பயன்படுத்தலானார்கள்.

மக்களின் ஆதரவைப் பெற ஆசைப்படுகிற அரசியல் கட்சிகளும் பத்திரிகைகளை தங்களுக்குரிய கருவிகளில் ஒன்றாகப் பயன்படுத்தலாயின.

கால ஓட்டத்தில், பத்திரிகைகளின் வளர்ச்சியையும், நாட்டில் அவைகளுக்கு இருக்கிற வரவேற்பையும் புரிந்து கொண்டு, பத்திரிகையையும் லாபம் தேடித் தரக்கூடிய ஒரு தொழிலாக, வெற்றிகரமாக நடத்த முடியும் என்று பண அதிபர்கள் பத்திரிக்கைத் துறையில் புகுந்து வெற்றிகரமாகச் செயல்புரியலானார்கள்.

இந்த அடிப்படையில் தான், எல்லா நாடுகளிலும், பத்திரிகைகளின், வரலாறு அமைந்து காணப்படுகிறது. தமிழ்நாட்டிலும் இதே நிலைமை தான்.

இன்று தமிழில் பல நாளேடுகளும், பலப்பல வாரப் பத்திரிகைகள், மாதமிருமுறை வெளியீடுகள், மாத இதழ்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. சில பத்திரிகைகள் பல லட்சம் பிரதிகள் விற்பனையாகின்றன.

ஆகவே, வாசகர்களின் எண்ணிக்கை மிகப்பெரும் அளவில் பெருகியுள்ளது என்பது புரிகிறது. ஆனால், வாசகர்களின் தரம் உயர்ந்திருக்கிறதா? மக்களின் அறிவுத்

தரம் உயர்வதற்கும், சமூகத்தின் குறைபாடுகள் அகலவும், சமூக மனிதர்கள் மேனிலை எய்தவும் இப்பத்திரிகைகள் என்ன செய்திருக்கின்றன; செய்து வருகின்றன என்று கவனித்தால், நிலைமை உற்சாகம் தருவதாக இல்லை.

தற்காலப் பத்திரிகைகளின் போக்கில் அதிருப்தி கொண்டவர்கள், கசப்பு அடைகிறவர்கள், தமிழ்ப் பத்திரி-கைகள் எப்பவும் இதே போல் தான் இருந்தனவா; முன்பு பத்திரிகைகளின் தன்மை எவ்வாறு இருந்தது என்று கேள்வி எழுப்புகிறார்கள்.

தமிழில் பத்திரிகைகளின் வரலாறு முறையாக எழுதப் படவில்லை. சமீபகாலத்தில் ஒரு சில முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு, ஒன்றிரண்டு இதழியல் வரலாறுகளும், குறிப்பிட்ட காலகட்டத்தின் பலரகமான பத்திரிகைகள் பற்றிய தகவல் பட்டியல்களும் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது.

சில கல்லூரிகளில் பாடத்திட்டத்தில் ‘இதழியல்’ சேர்க்கப்பட்டு, மாணவர்கள் ஆய்வில் ஈடுபடுவதாகவும் தெரிய வருகிறது.

இவை எல்லாம் வரவேற்கப்பட வேண்டிய செயல்கள் தான். ஆயினும், இவை மட்டும் போதா. தமிழ்ப்பத்திரிகைகளின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய முழுமையான வரலாறு தேவை. அது எந்தக் காலத்தில், எவரால் நிறைவு செய்யப் படுமோ - சொல்வதற்கில்லை.

நான் இங்கே எழுத முற்படுவது பத்திரிகைகளின் முறையான வரலாறு இல்லை; இதழியல் ஆய்வும் இல்லை. ஒரு வாசகன் - இலக்கிய மாணவன் - என்ற முறையில்,

ஐம்பது வருடங்களுக்கு மேலாகவே பத்திரிகைகளை கவனித்து வருபவன் என்ற தன்மையில், பத்திரிகைத் துறை சம்பந்தமான சில தகவல்களையும் நான் உணர்ந்த உண்மைகளையும் எடுத்துச் சொல்கிறேன்.

'ஊருக்கு நல்லது சொல்வேன்; உண்மை தெரிந்தது சொல்வேன்' என்ற வாக்கு தான் என் நோக்கும் ஆகும்.



## 2

பத்திரிகைகளின் போக்குகள் பற்றி சிந்திப்பதற்கு வசதியாக ஒரு கால வரம்பை நிர்ணயித்துக் கொள்ளலாம் —

1947க்கு முன்பும் 1947 க்குப் பின்னரும்.

அதாவது, நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்னரும் சுதந்திரம் பெற்ற பிறகும்.

இக்கால வரம்புக்கு முன்னரும் பின்னரும், பத்திரி-கைகளின் போக்கிலும் வளர்ச்சியிலும், பளீரெனப் புலனாகிற வித்தியாசங்கள் இருப்பதால், இந்தப் பிரிவு பொருத்தமானதாகவும் அமைகிறது.

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்னால், மக்களுக்கும், அவர்களை வழிநடத்திச் செல்ல முனைந்த தலைவர்களுக்கும், அவர்கள் காட்டிய வழியில் செயலாற்றத் துணிந்த பத்திரிகைகளுக்கும், பத்திரிகையாளர்களுக்கும்

ஒரு பெரும் லட்சியம் இருந்தது: இந்த நாடு அந்நியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறவேண்டும்; நாம் நமது பிறப்புரிமையான சுதந்திரத்தை பெற்றே தீரவேண்டும் என்று.

1930களில் இந்திய தேசீய விடுதலைப் போராட்ட இயக்கத்தின் தலைமையை காந்திஜீ ஏற்றுக் கொண்ட பிறகு, 1933ல் அதை அவர் மக்களின் இயக்கமாக மாற்றிய பின்னர், நாடு நெடுகிலும் புதிய விழிப்பும் புதிய உத்வேகமும் ஏற்பட்டன.

மக்களின் இந்த உணர்வை சரியான பாதையில் — நல்வழியில் — செலுத்துவதற்காகவும், காந்திஜீயின் கருத்துக்களையும் கொள்கைகளையும் எடுத்துச் சொல்வதற்காகவும், பத்திரிகைகள் பாடுபட்டன.

வெறும் அரசியல் போராட்டம் மட்டுமே மகாத்மா காந்தியின் நோக்கமாக இருந்ததில்லை. சமூக மேம்பாடும், அதற்கான சீர்திருத்தங்களும், தனிமனிதப் பண்பாடும் ஆன்மீக உயர்வும் அவரால் வலியுறுத்தப்பட்டன. மதுவிலக்கு, தீண்டாமைஒழிப்பு, சாதி வேற்றுமைகளை அகற்றுதல், அவசிய உழைப்பு, ஒழுக்க நெறிகள், எளிமையான தூய வாழ்வு முதலியவற்றை காந்திஜீ பிரச்சாரம் செய்து வந்தார்.

இவற்றை மக்கள் மத்தியில் பரப்புவதற்காக நாடு நெடுகிலும் புதிய புதிய பத்திரிகைகள் தோன்றின — நாளேடுகள், வாரப் பத்திரிகைகள், மாதம் இருமுறை வெளியீடுகள் என்று.

தமிழ்நாட்டிலும் இச்செயல் மலர்ச்சி தீவிரமாக இருந்தது.

அதற்கு முன்னரும் தமிழ்ப் பத்திரிகைகள் செயலாற்றிக் கொண்டுதான் இருந்தன.

புதுயுகத்தின் வெள்ளிமுளைப்பு என்றும், தமிழ் மறுமலர்ச்சியின் விடிவெள்ளி என்றும், மறுமலர்ச்சிக்குப் பொன்ஏர் பூட்டியவன் என்றும் பிற்காலத்தில் பலவாறு போற்றப்பட்டு - தமிழ் எழுத்தாளர்களால் தங்கள் முன்னோடி எனவும், வழிகாட்டி என்றும் ஏற்றுக் கொள்ளப்பட்ட – மகாகவி சுப்பிரமணிய பாரதி பத்திரிகைகள் மூலம் தான் உணர்ச்சிக்கனலும், சிந்தனைச் சுடரும், அறிவொளியும் பரப்பினர்.

‘சுதேசமித்திரன்’ நாளிதழ் வாயிலாகக் கவிதைகளும் கட்டுரைகளும் எழுதிய அவர், தமது இதயஒலியை அழுத்தமாக எடுத்துச் சொல்வதற்காக ‘இந்தியா’ ‘சக்கிரவர்த்தினி’ போன்ற பத்திரிகைகளை நடத்தியது வரலாறு ஆகும்.

அவரது சமகாலத்தவரான வ. வெ. சு. ஐயர் (வ. வெ. சுப்பிரமணிய ஐயர்) தீவிர அரசியல்வாதியாகவும், உயர்ந்த ரசிக உள்ளம் பெற்ற இலக்கியவாதி ஆகவும், நல்ல படைப்பாளியாகவும் விளங்கினர். தமிழ்மக்கள் மேன்மையுறு-வதற்கு வீரமும் ஞானமும் பெற்ருக வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். அதற்காக ‘பாலபாரதி’ என்ற பத்திரிகையை நடத்தினர்.

மக்களுக்கு வீர உணர்ச்சி புகுத்துவதற்காக, மராட்டிய மன்னன் வீரசிவாஜி, மகா அலெக்சாந்தரை எதிர்த்துச் சமரிட்டுத் தோல்வி கண்ட போதிலும் தலைவணங்காது நின்ற மாமன்னன் சந்திரகுப்தன்; மற்றும் ஐரோப்பிய நாடுகளில் விடுதலைக்காகப் போராடிய வீரர்கள் ஆகியோரது வரலாற்றை உணர்ச்சி ததும்பும் நடையில் கட்டுரைகளாகவும் அவர் எழுதினர்.

தமிழ்ச் சிறுகதையை, மேல்நாட்டு இலக்கிய உத்திகளைப் பின்பற்றி, தற்காலப் பாங்கும் இலக்கிய வடிவமும்

பெறுவதற்கு வழிகாட்டிய முதல்வர் வ. வெ. சு. ஐயர் தான். தமிழில் ரசனுபூர்வ விமர்சனத்துக்கு வழிவகுத்த பெருமையும் அவருக்கு உண்டு. இதற்கெல்லாம் அவர் பத்திரிகையைத் தான் பயன்படுத்தினர்.

பாரதியோடு நெருங்கிப் பழகி, பாரதியாரால் தம்பி என அழைக்கப்பட்டவர் பரலி சு. நெல்லையப்பர். அவர், பாரதிக்குப் பிறகு, பாரதி பாதையில், 'லோகோபகாரி' என்ற பத்திரிகையை நடத்தினர். அது தேசீய விஷயங்களையும், உலகச் செய்திகளையும், அறிவுபுகட்டும் கட்டுரைகளையும் வெளியிட்டதுடன் பாரதியின் புகழையும் எடுத்துரைத்தது.

1933-ல் மொழிகளின் மறுமலர்ச்சி ஒளிவீசியது. இந்திய மொழிகள் அனைத்திலும் புதிய பத்திரிகைகள் தோன்றின. காந்தீய நெறிகளைப் பரப்ப முயன்றதோடு, எழுத்தில் புதிய புதிய பரிசோதனைகளிலும் அவை உற்சாகம் காட்டின, தமிழிலும் இந்த வேகம் காணப்பட்டது.

சங்கு சுப்ரமண்யன் ' சுதந்திரச் சங்கு ' என்ற காலணப் பத்திரிகையை ஆரம்பித்தார். டி. எஸ். சொக்கலிங்கம் ' காந்தி' என்ற பத்திரிகையைத் தொடங்கினர். பாரதியோடு வாழ்ந்தவரும், பாரதி பக்தருமான வ. ரா. (வ. ராமஸ்வாமி) டி. எஸ். சொக்கலிங்கம் ஆகியோர் துணையோடு, கே. சீனிவாசன் ' மணிக்கொடி ' வாரப் பத்திரிகையை ஆரம்பித்து நடத்தினர். ' ஜெயபாரதி ' என்றொரு காலணு வார இதழும் வந்தது.

இவை தேசீய விடுதலை உணர்வை ஊட்டின; சமூக சீர்திருத்தக் கருத்துக்களை வலியுறுத்தின. தனிமனித உயர்வுக்கான சிந்தனைகளை அழுத்தமாகக் கூறின. அரசியல், பொருளாதார விஷயங்களை விளக்கின. சிறுகதைகளையும்,

ஓரங்க நாடகங்களையும், இலக்கியச் சிந்தனைகளையும் கொடுத்தன. எழுத்தாற்றல் உள்ள இளம் எழுத்தாளர்களை ஊக்குவித்தன.

பிற்காலத்தில் ' இலக்கிய மேதைகள் ' எனப் பெயர் பெற்ற — சாதனைகள் புரிந்த எழுத்தாளர்கள் புதுமைப்பித்தன், கு. ப. ராஜகோபாலன், ந. பிச்சமூர்த்தி, 'சிட்டி' பெ. கோ. சுந்தரராஜன், சி. சு. செல்லப்பா ஆகியோரின் ஆரம்ப கால எழுத்துக்கள் இப்பத்திரிகைகளில் தான் வெளி வந்தன

பின்னர் ' மணிக்கொடி ' மாதமிருமுறை வெளிவரும் கதைப் பத்திரிகையாகப் புது உருவம் பெற்றது. பி. எஸ். ராமையா அதன் ஆசிரியரானார். மேலே குறிப்பிட்டுள்ள எழுத்தாளர்களும், மற்றும் மௌனி, க. நா. சுப்ரமண்யம், ந. சிதம்பரசுப்ரமண்யன், கி. ரா. முதலியவர்களும் — பின்னர் ' மணிக்கொடி எழுத்தாளர்கள் ' எனப் பெயர் பெற்ற பலரும் நல்ல சிறுகதைகளை இப்பத்திரிகையில் எழுதினார்கள். ' மணிக்கொடி ' உலக இலக்கியக் கதைகளையும், இந்திய மொழிகளின் கதைகளையும் தமிழாக்கிப் பிரசுரித்தது.

அந்நாட்களில் எழுத்தாளர்கள் இப்போது போல் அதிகம் பேர் இல்லை. பத்திரிகைகளும் அதிகம் இல்லை. இருந்த பத்திரிகைகளும் எழுத்தாளர்களுக்கு 'சன்மானம்' என்றோ, ' அன்பளிப்பு ' என்றோ எதுவும் தந்ததில்லை. தரக்கூடிய நிலையில் இருந்ததுமில்லை. ஒவ்வொரு பத்திரிகையும் உயிர் வாழ்வதற்கே போராட வேண்டிய நிலைமை தான் இருந்தது.

இருப்பினும், எழுத்தாளர்கள் கொள்கைப் பிடிப்போடும் லட்சிய தாகத்தோடும் எழுதிக் கொண்டிருந்தார்கள். கல்லூரிப் படிப்பு படித்தவர்களும், பார்த்த உத்தியோகத்தை

உதறிவிட்டு எழுத்துத்துறையில் ஈடுபட்டவர்களும் பலராவர். அவர்களில் அநேகர் பத்திரிகைகளில் சேர்ந்து பணிபுரிந்-தார்கள். சிரமமான வாழ்க்கையை அவர்களே விரும்பி ஏற்றுக் கொண்டார்கள். தமிழ் மொழிக்காகவும் சமூக உயர்வுக்காகவும் பத்திரிகைகள் மூலம், எழுத்துக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட அவர்களை வாழ்க்கை வெகுவாக சோதிக்கத் தான் செய்தது. என்றாலும் கூட, தாங்களாகவே ஏற்றுக்கொண்ட பாரமான சிலுவையை அவர்கள் மகிழ்ச்சியோடு சுமந்தார்கள். எழுத்துப்பணியில் அவர்கள் சந்தோஷம் கண்டார்கள்.

அந்தக் காலத்தில் இலக்கியப் பத்திரிகைகள் என்று ஒரு சில தான் வெளிவந்தன. செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, ஆனந்த போதினி ஆகியவை குறிப்பிடத் தகுந்தவை. இவை தமிழுக்குக் 'கதி' கம்பனும் திருவள்ளுவரும் தான் என்று வலியுறுத்திக் கொண்டிருந்தன. வித்வான்களும் பண்டிதர்களும் பேரறிஞர்களும் கம்பராமாயணம், திருக்குறள், சங்ககால இலக்கியம் பற்றி இவற்றில் கட்டுரைகள் எழுதிக் கொண்-டிருந்தார்கள். 'ஆனந்த போதினி' தற்கால ரீதியில் தொடர் கதையும் பிரசுரித்தது. நாரணதுரைக்கண்ணன் அந்தப் பத்திரிகையின் ஆசிரியராகப் பணிபுரிந்தார்.

அத்தகைய ஒரு சூழ்நிலையிலே தான், இலக்கியம் அகண்டமானது ; வளர்ந்து கொண்டே இருப்பது ; கதைகளும் கட்டுரைகளும் , பாரதி கவிதைகளும் இலக்கியம் தான் என்று அறிவுறுத்தி, செயலிலும் நிரூபிக்க வேண்டிய பொறுப்பு 'மணிக்கொடி' எழுத்தாளர்களுக்கு ஏற்பட்டது. அதை அவர்கள் திறமையாகவே நிறைவேற்றினார்கள்.

அக்காலகட்டத்தில் தான் 'ஆனந்தவிகடன்' பத்திரிகையும் வளரலாயிற்று. அது ஜனரஞ்சகப் பத்திரிகையாகவே

வளர்ந்தது. ஆழ்ந்த இலக்கியத்தின் மீது அதற்கு நாட்டம் கிடையாது. சமூகத்தில் நிலவுகிற வறுமை, துன்ப துயரங்கள், சோக நிகழ்வுகள், கொடுமைகள் முதலியவற்றை எழுத்திலே பிரதிபலிக்கத் தேவையில்லை என்பதே அதன் கொள்கை. வாழ்க்கையை மேலோட்டமாகப் பார்ப்பது; இன்பங்களை எடுத்துக் காட்டுவது; எல்லோரும் சந்தோஷ மாக இருக்க உதவுவது; கதைகள் எப்போதும் இன்ப முடிவையே கொண்டிருப்பது- இவையே விகடன் மனோபாவமாகும்.

இந்தப் போக்கை நன்கு வளர்க்கும் முன்னோடி யாகவும் வழிகாட்டியாகவும் விளங்கினார் 'ஆனந்த விகடன்' ஆசிரியர் பொறுப்பிலிருந்த 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி. அவர் மிகுந்த திறமை படைத்தவர். அரசியல், பொருளா- தாரம், சமூக விஷயம், சங்கீதம் முதலிய சகல விஷயங்களையும் சாதாரண வாசகருக்கும் புரியும் விதத்தில் எளிய நடையில், சுவாரஸ்யமாக எழுதக் கூடிய ஆற்றல் அவருக்கு இருந்தது. இவற்றுடன் சுயமான நகைச்சுவையும் அவர் எழுத்தில் கலந்து கொண்டது. கதைச் சுவை உள்ள ரசமான கதைகளையும், வாசகர்களை ஈர்க்கும் தொடர் கதைகளையும், அழகான நடையில் அவர் எழுதினார். தமிழ் நாட்டில் பத்திரிகை படிக்கும் வாசகர்களின் எண்ணிக்கை பெருகுவ தற்கு 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தியின் எழுத்துத் திறமையும் ஒரு முக்கிய காரணமாக அமைந்திருந்தது.

அத்துடன், பத்திரிகை பரவலாகவும் வேகமாகவும் பரவுவதற்காக அநேக வியாபார உத்திகளை அதன் அதிபர் எஸ். எஸ். வாசன் கையாண்டார். ஒவ்வொரு பிரதியிலும் 'அதிர்ஷ்டஎண்' என்று நம்பர் குறித்து, தேர்ந்தெடுத்த சில எண்களுக்கு 'அதிர்ஷ்டப்பரிசு' என்று பணம் அளித்தல்;

இதழ் தோறும் விதம்விதமான போட்டிகளை அறிவித்து, பரிசு வழங்குதல் ; பகுத்தறிவுப் போட்டி - குறுக்கெழுத்துப்போட்டி என்று பெறும் தொகை பரிசுகள் அளித்தல் ; முக்கிய ஊர்களில் இலவசமாகப் பிரதிகளை விநியோகித்து வாசகர்களைக் கவர்ந்து இழுத்தல் - இவை சில.

இவற்றுடன், சிறுகதைப் போட்டி, நாவல் போட்டி என்று ஏற்படுத்தி, எழுத்தாளர்களையும் அவர் ஊக்குவித்தார். ஆனந்த விகடனில் பிரசுரமாகும் எழுத்துகளுக்குப் பணம் வழங்கியும் எழுத்தாளர்களை உற்சாகப்படுத்தினர்.

அதே சமயத்தில், 'ஆனந்தவிகடன்' தமிழ் இலக்கிய உணர்வு வளரவும் தன்னாலியன்றஅளவு பணிபுரிந்திருக்கிறது. பி.ஸ்ரீ ஆச்சார்யா எழுதி வந்த கம்பராமாயணக் கட்டுரைகள் பெரும்பாலருக்கு அக்காவியத்தின் சிறப்பை உணரச் செய்தன.

முதலில், 'கம்பசித்திரம்' என்ற தலைப்பில் பி.ஸ்ரீ. எழுதினார். சேகர் எனும் சிறந்த ஓவியர் தீட்டிய சித்திரங்கள் அவற்றுக்கு அழகும் பெருமையும் சேர்த்தன. பிறகு, சில ஆண்டுகள் கழிந்ததும் 'சித்திர இராமாயணம்' என்ற தலைப்பில் ராமாயண விளக்கம் அவரே எழுதினார். அப்போது 'சித்திரலேகா' என்ற ஓவியர் வரைந்த தனிரகச் சித்திரங்கள் அவற்றை அழகுபடுத்தின.

சங்க காலத் தனிப் பாடல்களுக்கு அழகிய விளக்கங்கள் எழுதி, அட்டையில் வர்ண ஓவியம் அச்சிட்டு, சங்க இலக்கியத்தை அறிமுகம் செய்த பெருமையும் விகடனுக்கு உண்டு. புதுமையான, தரமான, நல்ல கதைகளையும் 'விகடன்' நிறையவே பிரசுரித்துள்ளது அந்தக் காலத்தில்.

'மணிக்கொடி' யின் ஆழ்ந்த இலக்கிய நோக்கையும் விகடனின் மேலோட்டமான இலக்கியப் போக்கையும் இணைக்கும் ஒரு முயற்சி போல — ஒரு மிதவாதத் தன்மையுடன் செயல்பட்டு வந்தது, 1930 களில் ஆரம்பிக்கப்பட்ட 'கலைமகள்' மாதப் பத்திரிகை.

'கலைமக' ளின் ஆரம்ப வருடங்களில், 'ரொம்பப் பெரிய மனிதர்' களின் கட்டுரைகள் பிரசுரிக்கப்பட்டன. மகாமகோ பாத்தியாய உ. வே. சாமிநாதய்யர் தமது அனுபவங்களை இனிய எளிய தமிழில் சுவையான கட்டுரைகளாக எழுதினார். 'மணிக்கொடி' நின்ற பிறகு அதன் படைப்பாளிகள் தங்கள் திறமையைக் காட்டுவதற்கு உரிய களமாக அமைந்தது கலைமகள் தான். விகடனில் எழுதும் எழுத்தாளர்களும் அதில் எழுதினார்கள். மொழிபெயர்ப்புக்கும் அது நிறையவே தன் பங்கை ஆற்றியுள்ளது—1947க்கு முன்பு.

தாராசங்கர் பானர்ஜி, பங்கிம் சந்திரர், பிரேம் சந்த் முதலிய இந்திய மொழி நாவல்களைத் தமிழுக்கு அறிமுகம் செய்துள்ள பெருமை கலைமகளுக்கு உண்டு.

'ஆனந்த விகடன்' வெற்றிகரமாக வளரவும், அதைப் பின்பற்றிப் பல விகடன்கள் தோன்றின. பிரசண்ட விகடன், குமார விகடன் முக்கியமானவை.

நாரணதுரைககண்ணன் 'பிரசண்டவிகடன், ஆசிரியராக இருந்தார். விறுவிறுப்பான முறையில், அவர் பல விஷயங்கள் குறித்தும் விமர்சன ரீதியில் கட்டுரைகள் எழுதினார். வாசகர்களை ஈர்க்கும் தொடர்கதைகளாக அநேக நாவல்கள் எழுதினார். (நான் ஏன் பெண்ணாய் பிறந்தேன்?, இவ்வுலகை திரும்பி பாரேன், சீமாட்டி கார்த்தியாயினி, தாசிரமணி, உயிரோவியம் முதலியன. ஜீவா என்பது அவர் புனைபெயர்.)

இலட்சியவாதிகளான சிலர், உயர்ந்த கொள்கைகளைப் பரப்புவதற்காக சொந்தத்தில் பத்திரிகை நடத்திக்கொண்டிருந் தார்கள். தனிநபர் முயற்சிகளாக. திரு.வி. கலியாணசுந்தரனார் நடத்திய 'நவசக்தி'யும், கே. எஸ். வேங்கடரமணி நடத்திய 'பாரதமணி'யும் இப்படிப்பட்டவை.

வேங்கடரமணி 'கிராமப் புனருத்தாரண' த்தில் (கிராமங்களுக்குப் புத்துயிர் அளிப்பது) தீவிர ஆர்வம் உடையவர். 'முருகன் ஓர் உழவன்' 'தேசபக்தன் கந்தன்' என்ற அவருடைய நாவல்கள் பிரபலமானவை. அவர் எழுதிய இங்கிலீஷ் நூல்கள் பல 1930 களுக்கு முன்பு இங்கிலாந்து பிரசுரக் கம்பெனியால் வெளியிடப்பட்டவை யாகும். அவர் தமிழில் நடத்திய 'பாரதமணி' உயர்ந்த நோக்கங்கள் கொண்ட தரமான பத்திரிகையாக இருந்தது.

பெண்கள் பத்திரிகை என்றும் அந்நாட்களில் சில தனிப் பத்திரிகைகள் வரத்தான் செய்தன. 'லோத்ரா' கம்பெனியார் நடத்திய 'கிருகலட்சுமி' குறிப்பிடத்தகுந்தது.

திருமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் 'ஜகன்மோகினி' என்ற மாதப் பத்திரிகையை வெகுகாலம் தொடர்ந்து நடத்தினார். அவர் எழுதும் நாவல்கள் (தேச சேவை, சமூக சீர்திருத்தம் முதலிய விஷயங்களைக் கொண்டவை) அதில் பகுதி பகுதியாகத் தொடர் பிரசுரம் பெற்றன.

'தினமணி' நாளிதழ் கூட இலக்கியத்துக்கு அரிய சேவை செய்துள்ளது. 1930 களில் வருடம் தோறும் தினமணி 'ஆண்டு மலர்' வெளியிட்டது. புதுமைப் பித்தன் மேற்பார்வையில் உருவான அம் மலர்கள் இலக்கிய ரசிகர் களுக்கு நல்ல விருந்தாக விளங்கின. ஒவ்வொரு

ஆண்டுமலரும், அருமையான கதைகளையும் கட்டுரைகளையும் கவிதைகளையும் கொண்ட இலக்கியக் களஞ்சியமாகவே அமைந்திருந்தது.

'மணிக்கொடி' கதைப்பத்திரிகை நின்று போனது இலக்கியவாதிகளுக்கு ஒரு நஷ்டமாகவே இருந்தது. அதைப் போல் புதிய சோதனைகளுக்கும் தரமான கதைகளுக்கும் இடம் தரக்கூடிய ஒரு பத்திரிகையின் தேவை பலராலும் உணரப் பட்டது.

அந்தக் குறையை நீக்குவதற்காக அவ்வப்போது சில முயற்சிகள் தோன்றின. சிறிது காலம் தம் பங்கைச்செலுத்தி விட்டு மறைந்தும் போயின. சூறுவளி, கலாமோகினி, கிராம ஊழியன், தேனீ போன்றவை அவை.

'டைஜஸ்ட்' பாணியில் ஒரு தரமான பத்திரிகையாக 'சக்தி' வந்தது. பல்வேறு விஷயங்கள் பற்றிய கட்டுரைகள் நிறைய இருக்கும். கதைகளும் உண்டு. மொழி பெயர்ப்பு விஷயங்களே மிகுதி. துணுக்குகள் அதிகம். வை. கோவிந்தன் நடத்திய இப்பத்திரிகையில் தி.ஜ.ர(தி.ஜ.ரங்கநாதன்) நீண்ட காலம் ஆசிரியராக இருந்தார். அவர் 'மஞ்சரி' ஆசிரிய-ராகப் போய் விட்டதும், சுப. நாராயணன் என்ற திறமை படைத்த எழுத்தாளர் அதன் ஆசிரியரானார். அவருக்குப் பிறகு தொ.மு.சி. ரகுநாதனும் கு. அழகிரிசாமியும் 'சக்தி', ஆசிரியர்களாகப் பணியாற்றினர். இறுதிக் கட்டத்தில் ('சரஸ்வதி') விஜயபாஸ்கரன் அதன் ஆசிரியரானார். 'சக்தி' மாதிரி ஒரு பத்திரிகை தமிழுக்குத் தேவைதான்.

தற்காலத்திய சிறுபத்திரிகைகள் மாதிரி என்று சொல்ல முடியாவிட்டாலும், குடிசைத் தொழில் போன்ற சிறு முயற்சி களாகச் சிறு சிறு இதழ்கள் அங்கங்கே தோன்றி, சிறிது

காலம் தம்மாலியன்ற அளவுக்குப் பணிபுரிந்து விட்டு, உயிர் விடுவது அக்காலத்திலும் சகஜமாகத் தானிருந்தது. இளம் எழுத்தாளர்கள் வளர்ச்சி பெறுவதற்கு உதவக்கூடிய பயிற்சித் தளங்களாக இவை உதவின என்று சொல்ல வேண்டும்.



# 3

**1947** ல் இந்தியா சுதந்திரம் அடைந்தது.

தேசீய விடுதலைக்காகப் போராடிய கட்சியைச் சேர்ந்தவர்கள் ஆட்சிப்பொறுப்பை ஏற்ருர்கள். சுதந்திரம் கிடைத்து விட்டது என்ற திருப்தி பலப்பலருக்கும் ஏற்பட்டது. தாங்கள் எதுக்காகப் போராடினுர்களோ அந்த லட்சியம் சித்தித்து விட்டது என்ற ஒரு நிறைவு நாடுநெடுகிலும் பரவியதாக தோன்றியது.

1948ல் காந்திஜீ சுட்டுக் கொல்லப்பட்டார்.

காலவேகத்தில், மாறுதல்களும் முன்னேற்றங்களும் மெதுமெதுவாகத் தலைகாட்டின. பதவி மோகமும், பணம் பண்ணும் ஆசையும் பலரையும் பிடித்துக் கொண்டன. சந்தர்ப்பவாதிகளும், பணம் படைத்தவர்களும், முன்பு போராட்டங்களில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியிருந்தவர்களும், சுயலாபநோக்கு உடையவர்களும், ஆளும் கட்சியைப் பயன்படுத்திக் கொண்டு முன்னேறுவதில் ஈடுபட்டனர்.

காந்திஜீயின் கொள்கைகளைப் பின்பற்றியவர்களில் பெரும்பாலோர் அவற்றை ஒதுக்கிவிட்டனர்; நடைமுறைக்கு ஒவ்வாதவை வாழ்க்கை முன்னேற்றத்துக்குக் கட்டுபடி-யாகாதவை-என்று கருதி, அவற்றை மறக்கலாயினர். உண்மையாக அவற்றின் மீது பற்றுக்கொண்டவர்கள் இச் சுழிப்பு-களிலிருந்து விலகி ஒதுங்கி வாழலாயினர்.

ஆளவந்தவர்கள், முன்காலத்தைப் போல, மக்களோடு தொடர்பு கொள்ளவும் மறந்தனர். சமூகசீர்திருத்தம்' மக்கள் கலாச்சாரம், தனி மனித உயர்வு போன்ற விஷயங்கள் எப்பவாவது அலங்காரமாகப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் தேவையானவை என்ற மனநிலை பரவலாயிற்று.

பத்திரிகைகளையும் பத்திரிகையாளர்களையும் இந்தப் போக்கு பாதித்ததில் வியப்பில்லை.

லட்சியம், கொள்கைப் பற்றுதல் என்ற நோக்கில் பத்திரிகைகளை நடத்தி நஷ்டப்பட்டுக் கொண்டிருப்பது சரியல்ல; தொழில்முறையிலும் பத்திரிகைகளை லாபகரமாக நடத்த முடியுமா என்று பார்க்கவேண்டும் என்ற எண்ணம் பத்திரிகை நடத்துபவர்களிடையே வலுப்பெற்றது. பொழுது போக்குக் கதைகள், சினிமா விஷயங்கள் முதலிய ஜனரஞ்சகமான விஷயங்களை அதிகம் அதிகமாகத் தருகிற செயல்முறை வளரலாயிற்று.

மிகுதியாக முதலை ஈடுபடுத்தி, தொழில் நுணுக்கங்களைக் கையாண்டு, கணிசமான லாபம் பெற்றுத் தரக்கூடிய சாதனமாகப் பத்திரிகையும் விளங்கமுடியும் - தமிழ்ப் பத்திரிகையையும் வெற்றிகரமான தொழில் முயற்சியாக ஆக்க வேண்டும் - என்று தீர்மானித்த பண அதிபர்கள் பத்திரிகைத் துறையில் துணிச்சலோடு ஈடுபட்டார்கள்.

சராசரி வாசகர்களை - சாதாரண மக்களை - கவர்ந்திழுக்கக் கூடிய உத்திகளை எல்லாம் கையாள முன்வந்தார்கள். மேலைநாட்டுப் பத்திரிகை அதிபர்கள் கடைப்பிடித்து வெற்றி கண்ட வியாபார மற்றும் விளம்பர நுணுக்கங்கள் பலவற்றையும் வெற்றிகரமாகக் கையாண்டரர்கள்; தங்கள் பத்திரிகைகளை வளர்த்தார்கள்.

ஆளும் கட்சியினரின் போக்கில் அதிருப்தி கொண்ட இதர அரசியல் கட்சிகளும், மக்கள் மத்தியில் தங்கள் செல்-வாக்கைப் பெருக்கிக் கொள்வதற்காகப் பத்திரிகைகளைப் பயன் படுத்த முனைந்தன.

எனவே, சுதந்திரத்திற்குப் பிறகு, புதிய புதிய பத்திரிகைகள் அதிகம் தோன்றிக் கொண்டேயிருந்தன. நாட்டில் சினிமாவின் செல்வாக்கு தீவிரமாகவும் வேகமாகவும் வளர்ந்து கொண்டிருந்ததால், சினிமா சஞ்சிகைகளும் எண்ணிக்கையில் அதிகமாயின.

எல்லாமே, வியாபார நோக்கில், மிக அதிகமான மக்களை எட்ட வேண்டும் என்ற ஆசையோடும் ஆர்வத்தோடுமே தயாரிக்கப்பட்டன. அனைத்து முயற்சிகளும் வெற்றி பெற்றன என்று சொல்வதற்கில்லை.

பத்திரிகையையும் லாபகரமான தொழிலாக நடத்தி வெற்றி பெறமுடியும் என்று சாதித்துக் காட்டிய பெருமை, 'தினத்தந்தி' 'குமுதம்' ஆகியவற்றின் அதிபர்களைச் சேரும்.

'தினத்தந்தி' நாளிதழ். பத்திரிகை என்பது சாதாரண ஜனங்களும் விரும்பிப் படிக்கக் கூடியதாக இருக்க வேண்டும்; ரிக்ஷாக்காரன் கூடப் புரிந்து கொள்ளக்கூடிய விதத்தில்

செய்திகளை எளிமையாகவும் கவர்ச்சிகரமாகவும் கொடுக்க வேண்டும் என்று அதன் அதிபர் கருதினார். அவர் திறமை யான பத்திரிகையாளர் (ஜர்னலிஸ்ட்) என்பதை நிரூபித்தார்.

செய்திகளை எந்த விதமாக எழுத வேண்டும் என்று அவர் தமது பத்திரிகையில் பணிபுரிய வந்த உதவியாளர் களுக்கு வகுப்பு நடத்தி, கற்றுத்தந்தார். உதவியாளர்கள் பெயர் பெற்ற எழுத்தாளர்கள் அல்லர். பள்ளி இறுதி வகுப்பை முடித்து விட்டு வந்த இளைஞர்களையே அவர் தேர்ந்தெடுத்துப் பழக்கினார்.

தினத்தந்தி பாஷை என்றே தனியாக ஒன்று உருவாக் கப்பட்டது. சதக் சதக் என்று கத்தியால் குத்தினான்; ‘இடிராஜா’, ‘இரவு ராணி’, ‘ரோட் ஸைட் ரோமியோ, என்பன போன்றெல்லாம் பதங்கள் செய்தித் தலைப்புகளிலும், செய்திகளிலும் தாராளமாக அடிபடலாயின. அரசியல், சமூக, சர்வதேசச் செய்திகளுக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டிய அவசியம் எதுவுமில்லை. கொலை, கொள்ளை, கற்பழிப்பு, காதல் தோல்வி, விபசாரம் போன்ற விஷயங்களே எடுப்பா- கவும் முக்கியமாகவும் பிரசுரிக்கப்படும் வழக்கம் ஏற்பட்டது. கார்டூன்கள், கேலி பேசுகிற (நகைச்சுவையான புதுமொழிகள் உதிர்க்கிற) காமிக் சித்திரங்கள், மர்மத் தொடர்கதைப் படவரிசை போன்ற, வாசகர்களைக் கவரக்கூடிய அம்சங்கள் நிரந்தரமாக இடம்பெற்றன. சினிமா விஷயங்கள் நிறையவே தரப்பட்டன.

‘தினத்தந்தி’ சர்வ ஜனரஞ்சகமான பத்திரிகையாக வளர்ந்தது. பல மாவட்டங்களில் பதிப்பித்து வெளியிடும் முறையும், அலுவலகங்களும் ஏற்பட்டன. அதே போக்கில்

அந் நிறுவனத்தால், மாலைப் பத்திரிகைகளும் வெளியிடப் பட்டன.

நாளிதழ் என்பது உலக விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கான சாதனம் என்பதைவிட வம்பளப்பு - அக்கப் போர்- கிசுகிசுச் செய்தி வகையராக்களைத் தொகுத்துத் தரும் தாள் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது.

பத்திரிகைத் துறையில் போட்டியிட்டு வளரத் துடித்த இதர நாளிதழ்களும் 'தினத்தந்தி' யின் போக்கைப் பின்பற்றுவதே வெற்றிக்கு வழி என்று தீர்மானித்து அதே பாதையில் போவது தவிர்க்க முடியாத நிலமை ஆகிவிட்டது.

சுதந்திரத்திற்குப் பின்னர், வேகவளர்ச்சி பெற்ற ராவிட இயக்கங்களைச் சேர்ந்த தலைவர்களும் பெயர்பெற்ற ்ரச்சாளர்களும், தத்தமக்கு என்று தனித்தனி ஏடுகள் ஆரம்-பித்தார்கள். வாரம், மாதமிருமுறை, மாதம் என்ற கால அளவில் வெளிவரக்கூடிய பத்திரிகைகள் அநேகம் தோன்றின.

வடவர் எதிர்ப்பு, ஆரியர் (பார்ப்பனர்) எதிர்ப்பு, மத எதிர்ப்பு கடவுள்எதிர்ப்பு என்று எதிர்மறை நோக்கில் பலவகை யிலும்சமூகத்தில், முக்கியமாக இளைய தலைமுறையினரிடையே, ஒரு வெறுப்புக் 'கலாசார'த்தை அவை வளர்த்தன. சிந்திக்கத் தூண்டும் செயலையும், சிந்தனையாளர்கள் சிலரைப் பற்றிய தகவல்கள் மற்றும் கட்டுரைகளையும் அவை தந்ததை — மறப்பதற்கில்லை. அழகான தமிழ்நடையை — அடுக்குமொழி மேடைப்பேச்சு நடையை – பலப்பல இளைஞர்கள் எழுதக் கற்றுக்கொண்டதும் இப்பத்திரிகைகளின் தாக்கத்தினால் தான் என்றும் சொல்லலாம்.

'பாரதிதாசன் பரம்பரை' யில் அதிகமான கவிஞர்கள்

உருவாவதற்கும் திராவிட இயக்கப் பத்திரிகைகள் துணைபுரிந்தன.

சர்வதேச அடிப்படையிலும், மார்க்சீயக் கண்ணேட்டத்தில் சமூகப் பிரச்னைகளைக் காணவும், முற்போக்கு நோக்குடன் படைப்பு முயற்சிகளில் ஈடுபடவும் கம்யூனிஸ்ட் பத்திரிகைகள் உதவின. இவை வியாபார வெற்றி பெற்றன - வெகுஜன வரவேற்பை அடைந்தன - என்று சொல்லமுடியாது.

ஜனரஞ்சகமான வாரப்பத்திரிகையாக வளர்ந்து, வாணிப வெற்றி கண்டது 'குமுதம்'. இது 'மாதம் மும்முறை' வெளியீடு ஆகத் தோன்றி, விரைவிலேயே வாரப் பத்திரிகை யாக மாறியது. பத்திரிகையின் உள்ளடக்கத்திஞலும், அட்டைப்படக் கவர்ச்சியாலும் வாசகர்களைக் கவர்ந்தது.

அத்துடன், வாணிப நோக்கில் பல விளம்பர உத்திகளும், அவ்வப்போது கையாளப்பட்டன. முக்கிய நகரங்களில் இலவசமாகப் பிரதிகளை விநியோகித்து வாசகர்களை ஈர்ப்பது, குறைந்த விலைக்கு மிக அதிகமான பக்கங்கள் தருவது, சிறப்பு மலர்களில் 'மருக்கொழுந்து செண்ட்' பூசி கமகம வாசனையோடு பத்திரிகையை பரப்புவது; போனஸ் இதழ் என்று இலவச இணைப்புகள் கொடுப்பது; இரட்டை இதழ் என்று ஒரு இதழின் விலைக்கே இரட்டைப் புத்தகங்கள் (குறுநாவல், அல்லது சுவையான விஷயங்களின் தொகுப்பு ஏதாவது கொண்ட அதிகப்படியான இரட்டைக் குமுதம்) வழங்குவது - இப்படி பலவகையாலும், 'குமுதம்' வாங்குவது நமக்கு லாபம் என்ற எண்ணத்தை வாசகர்களிடையே உண்டாக்கியது.

பொதுவாக, பெரும்பாலான வாசகர்கள் தங்களை சிரமப் படுத்துகிற - ( சிந்திக்கத் தூண்டுகிற - அறிவுக்கு வேலை

வைக்கிற —மூளையைச் சிறிது குழப்பக்கூடிய பின்னல் நடை மற்றும் உத்திகள் கொண்ட) கதை கட்டுரைகளை விரும்பிப் படிப்பதில்லை. இலகுவான ('லைட்டான') சமாச்சாரங்களையே ஆவலுடன் வாசிப்பது வழக்கம். ஆழ்ந்து, கவனம் செலுத்திப் படிக்க வேண்டிய விஷயங்களைவிட, மேலோட்டமாகப் பார்வையை மேயவிட்டு இலகுவில் புரிந்து கொள்ளக் கூடிய விஷயங்களே அவர்களை ஈர்க்கும். அந்த விதமான கதை களையே 'குமுதம்' தர முன்வந்தது.

கதைகளில் சுவையான கதை அம்சம் இருந்தால் பாதும். கலைத்தன்மை, நடைநயம், உளப் பரிசோதனை, தார்த்தம், சோதனை முறை போன்றவை எல்லாம் தேவை-யில்லை. கிளுகிளுப்பு ஊட்டும் தன்மை அவசியம் வேண்டும். செக்ஸ் உறவுச் சித்திரிப்பு அதற்கு உதவும் – இப்படிச் சில அளவு முறைகளுக்கு உட்படுகிற கதைகளையே 'குமுதம்' பிரசுரிக்கிறது.

எழுத்தாளர்கள் அனுப்புகிற கதைகளை மாற்றியும் திருத்தியும், மூன்று பக்கங்களுக்குள் சுருக்கியும், இரண்டு பக்கக் கதை – ஒரு பக்கக் கதை என்று ஆக்கியும், இஷ்டம் போல் பிரசுரிக்கும் உரிமையை அது வைத்துள்ளது.

துணுக்குகள், சிறு சிறு தகவல்கள், கிசுகிசுக்கள், சினிமா நடிகையர் பற்றிய ரசமான குறிப்புகள் போன்ற விஷயங்களை அதிகம் தருகிறது.

இலக்கியரசிகர் ஒருவர் ஒருசமயம் குறிப்பிட்டார்: வரவர ஜனங்களின் டேஸ்ட் (ருசி) மாறிப்போச்சு. ஹெவியான உணவுவகைகளை அவர்கள் நாடுவதில்லை. சிறுசிறு தீனிகள்–

ஸ்நாக்ஸ் – அவர்களுக்கு அதிகம் தேவைப்படுகிறது. ரோடு ஓரத்தில் நின்றும், பிளாட்பாரங்களில் நின்றும், மெதுவாக நடந்தபடியும் கொறிப்பதற்கு ஏற்ற நொறுக்குத் தீனி வகைகளுக்கே இன்று கிராக்கி. பத்திரிகை விஷயங்களிலும், இதே தன்மை காணப்படுகிறது. ஹெவி விஷயங்களை வாசகர்கள் வரவேற்பது கிடையாது. லைட்டான சமாச்சாரங்கள் – நொறுக்குத் தீனி போன்றவை – கொறிப்பதுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக – நிறைய வேண்டும். இன்றையப் பத்திரிகைகள் அவற்றை சப்ளை செய்கின்றன . . .

பத்திரிகைகளின் தேவைகளுக்குத் தக்கபடி சரக்குகளைத் தயாரித்துக் கொடுப்பதில் உற்சாகம் காட்டுகிற 'சரக்கு மாஸ்டர்கள்' ஆகிப்போனார்கள் எழுத்தாளர்கள்.

அவர்களுக்கு தாராளமாகவே பணம் கிடைக்கிறது பத்திரிகைகளிலிருந்து.

வாசகர்களைக் கவர்ந்து இழுப்பதற்கும், அவர்களை விடாது பிடித்து வைத்திருப்பதற்கும், 'தொடர்கதை' துணை புரிகிறது. காலப்போக்கில், ஒவ்வொரு பத்திரிகையும் மூன்று, நான்கு தொடர்கதைகளும், மற்றும் சில தொடர் அம்சங்களும் வெளியிடுவதை வழக்கமாக்கிக் கொண்டது. தினப்பத்திரிகைகளும் 'தொடர்கதை' பிரசரிக்கும் வழக்கத்தை மேற்கொண்டு விட்டன.

தொடர்கதைகள், வாசகர்களின் ஆவலைத் தூண்டும் விதத்தில், சம்பவ அடுக்குகள், அடுத்து என்ன நிகழும் என எதிர்பார்க்க வைக்கும் சஸ்பென்ஸ், கொலை–கொள்ளை–காதல் என்ற பெயரில் காம விவரிப்புகள், பெண் அங்க வர்ணனைகள் முதலிய கிளுகிளுப்பூட்டும் விஷயங்களை தாராளமாகக் கொண்டிருக்க வேண்டும் என்பது எழுதப்படாத

இலக்கணம். மர்மம், துப்பறிதல், சாகசச் செயல்கள் முதலியன நிறைந்த கதைகளுக்கு வரவேற்பு அதிகம். 'சரித்திர நாவல்' என்ற பெயரில், இந்தக் கலவைகளை அதிகம் சேர்த்து, புதுவித மர்ம நாவல்களும் எழுதப்படுகின்றன. பத்திரிகைகளின் இந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு அநேக எழுத்தாளர்களும் இருக்கிறார்கள்.

பத்திரிகையும் லாபம் தரக்கூடிய ஒரு வியாபாரம் தான் என்ற எண்ணமும், அதன் அடிப்படையில் செயல்புரிகிற போக்கும் 1950களில் வளரத் தொடங்கி, 1960களில் வலுவடைந்தது. 1970 களில் இது மும்முரமாயிற்று. பெரும் முலதனத்தை ஈடுபடுத்தி, இவ் வியாபாரத்தில் பலர் பிரவேசிக்கவும், பலப்பல வாரப்பத்திரிகைகள்' தோன்றி வளரலாயின. அவைகளுக்கிடையே போட்டி ஏற்பட்டு, ஒரு பத்திரிகை குறிப்பிட்டது போல, 'காகித ரேஸ்' தீவிரம் அடைந்தது.

அனைத்துக்கும் 'குமுதம்' பத்திரிகையே முன்னோடியும் வழிகாட்டியுமாக அமைந்தது.

'குமுதம்' லட்சம் லட்சமாக உயர்ந்து, வாரம் தோறும் ஐந்தரை லட்சம் பிரதிகள் செலவாகும் வெற்றிகரமான பத்திரிகை என்ற அந்தஸ்தை எட்டியது. ஒரு பத்திரிகைப் பிரதியை பத்து வாசகர்கள் படிக்கிறார்கள்; ஆகவே ஐந்தரை லட்சம் X பத்து என்ற அளவில் வாசகர் எண்ணிக்கை பெருகி உள்ளது என்றும் கணக்கிடப் பட்டுள்ளது.

இவ்வளவு பரந்த அளவில் வாசகர்களின் எண்ணிக்கை வளர்ந்திருப்பதற்காக சந்தோஷப்படலாம். சரி; வாசகர்களின்

தரம் உயர்ந்திருக்கிறதா ? இதை உரிய இடத்தில் கவனிப்போம்.

லாபகரமாக வளரப் போட்டியிடுகிற வாரப்பத்திரிகை-கள், அட்டை அமைப்பிலிருந்து, உள்விஷயங்கள்,- கதைகள் துணுக்குகள், ஜோக்குகள் வரை சகலவற்றிலும் - 'குமுதம்' இதழை காப்பி அடிப்பதை ஒரு 'தர்ம'மாகக் கொண்டு விட்டன.

அதனுல், 'முன்பு ஒரு குமுதம் இருந்த இடத்தில் இப்போது பல குமுதம்கள் காணப்படுகின்றன' என்று விமர்-சகர்கள் குறிப்பிடுகிற நிலமை நாட்டிலே சகஜமாகிவிட்டது. தனக்கென ஒரு தனித்தன்மையை உண்டாக்கி, அதைக் கட்டிக் காத்து வளர்க்க வேண்டும் என்கிற ஆர்வமும் செயல்வேகமும் வாரப்பத்திரிகைகள் நடத்துகிறவர்களுக்கு இல்லாது போய்விட்டது.

இவ்வளவுக்கும், பண அதிபர்கள் மட்டும் தான் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருக்கிருர்கள் என்றில்லை. எழுத்தாளர்களாக இருந்து, பத்திரிகைகளில் உதவி ஆசிரியர் களாகப் பணிபுரிந்து வளர்ச்சி பெற்றவர்களும், எப்படியோ பணம் சேர்த்து, அதிக மூலதனம் ஈடுபடுத்தி, தொழில் முறையில் பத்திரிகைகள் ஆரம்பித்து நடத்துகிருர்கள். அவர்களும் தொழில் அதிபர்களாகத்தான் மாறியிருக்-கிருர்கள்.

அவர்களுக்கும் பத்திரிகைகள் லாபம் பெற்றுத் தரக் கூடிய – தரவேண்டிய - வணிக சாதனம் தான். அந்நோக்கில் தான் அவர்களும் தங்களது பத்திரிகைகளை நடத்துகிருர்கள்.

பத்திரிகையை தொழில் முறையில் வளர்ப்பதற்காக

வேகமாக அச்சிடும் - - வண்ணம் வண்ணமாக அச்சிடக் கூடிய - ஆற்றல் மிகுந்த அச்சியந்திரங்களை அயல் நாடு களிலிருந்து இறக்குமதி செய்து, அவற்றை இயக்கக் கூடிய திறமையாளர்களுக்குப் பயிற்சி அளித்து, முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள் பத்திரிகைத் தொழில் அதிபர்கள்.

இந்த இயந்திரங்கள் சோம்பிக்கிடந்தால், முதல் முடக்கம் - நஷ்டம் என்ற அடிப்படையில், அவற்றை 'ஃபீட் பண்ணுவதற்காக' ஒவ்வொரு பத்திரிகை நிறுவனமும் இரண்டு மூன்று (சில நாலைந்து பத்திரிகைகள் கூட) ஆரம் பித்து நடத்துகிறது. வேக உற்பத்தியும் விற்பனை நோக்கும் தான் முக்கியமானவை. உயர்ந்த தரம் என்பது அவர்களது கவலைக்குரிய விஷயம் இல்லை.

அச்சுக்கலை நன்கு வளர்ந்திருப்பதை இன்றையப் பத்திரிகைகள் எடுத்துக்காட்டுகின்றன.

பணபலமும் இயந்திரத் துணையும் கொண்டு வளர்கிற - வளர்க்கப்படுகிற —ஒரு 'இண்டஸ்ட்ரி' (தொழில்; வியாபாரம்) ஆகத்தான் பத்திரிகையும் கருதப்படுகிறது. அதில் முதலீடு செய்துள்ள தொழில் அதிபர்கள், பத்திரிகை படிக்கிற வாச கர்களை, தங்களுடைய உற்பத்திச் சரக்கை வாங்கவேண்டிய — வாங்கக்கூடிய — 'கன்ஸ்யூமர்ஸ்' (நுகர்வோர்) ஆகவே மதிக்கிறார்கள்.

அவர்கள் விற்பனை செய்கிற சரக்குகளையே விரும்பி வாங்கக்கூடிய மனநிலையை நுகர்வோரிடம் உண்டாக்கிவிடுவது தொழிலதிபர்கள் கையாளும் வாணிப உத்திகளில் முக்கிய மானது ஆகும்.

தாங்கள் தொடர்ந்து லாபமும் ஏற்றமும் பெற்றுக் கொண்டிருப்பதற்கு, மக்கள் அறிவு விழிப்பும் சிந்தனை

வளர்ச்சியும், வாழ்க்கை மேம்பாடுகளும், சமூக மாற்றங்களும் பெற்றுவிடாது, தற்கால அமைப்பு முறைகள் அப்படி அப்படியே இருக்க வேண்டும் என்பது மக்களை நுகர்வோர் ஆக மாற்றிப் பலனடைகிற தொழில் அதிபர்கள் (முதலாளிகள்) நோக்கமும் செயல் முறையுமாம்.

இதை கவனித்துக் கொள்ளும் விதத்திலேயே சகல ரகமான மக்கள் தொடர்பு சாதனங்களும் (மாஸ் மீடியா) உலகெங்கும் பணஅதிபதிகளால் பயன்படுத்தப் படுகின்றன. பத்திரிகைகளும் இவற்றில் ஒன்று.

தமிழ்நாட்டிலும் இதே முறையில் தான் பண அதிபர்களின் பத்திரிகைகள் செயலாற்றிக் கொண்டிருக்கின்றன.

தற்காலப் பத்திரிகைகள், வாசகர்களுக்குத் தேவையான—வாசகர்கள் விரும்புகிற — அனைத்தையும் கொடுக்கிறோம் என்று சொல்லிக் கொண்டு, அவற்றை நடத்துகிற ஒரு சிலரது விருப்பு வெறுப்புகளையும் வக்கிரப்போக்குகளையும் மக்கள் மத்தியில் பரப்பியவாறு இருக்கின்றன. நாட்டின் கலைகள், கலாச்சாரம், மக்களின் பண்பாட்டு நலம், தனி மனித ஒழுக்க நெறிகள் முதலிய பலவற்றையும் சிதைத்துச் சீர்குலைத்து வருகிற விஷயங்களையே, மக்களுக்குப் பிடித்த — ஜனரஞ்சகமான— விஷயங்கள் என்று பத்திரிகை உற்பத்தியாளர்கள் வியாபாரச் சரக்குகளாக்கி விற்பனை செய்து கொண்டிருக்கிறார்கள்.

அரசியல் முதல், சமூக மக்களின் கவனத்தைக் கவர்கிற சகல விஷயங்களும் பத்திரிகையின் விற்பனையை அதிகப்படுத்த உதவுகிற சரக்குகள் என்ற தன்மையிலேயே எடுத்தாளப் படுகின்றன. மக்களில் சகலவிதமானவர்களின் பல்வேறு ருசிகளையும் திருப்திப்படுத்துகிற விதத்தில் சோதிடம்,

ஆன்மீக விஷயம், கோயில் புராணம், சினிமா மற்றும் தன் உயர்வுக்கு வழிகூறும் (செல்ஃப்—இம்ப்ரூவ்மென்ட்) உபதேசக் கட்டுரைகள், பயண அனுபவங்கள், மருத்துவ விஷயங்கள் எல்லாம் சேர்க்கப்படுகின்றன. இதே நோக்கில் தான் குறிப்பிட்ட சில எழுத்தாளர்களது கதைகளும் இணைக்கப்படுகின்றன.

திறமை வாய்ந்த எந்தத் தனி ஒரு எழுத்தாளரையும் நம்பிப் பத்திரிகை முதலாளி தனது பத்திரிகையை நடத்தவில்லை. ஆனால், சிறு பத்திரிகைகள் மூலமோ, புத்தகப் பிரசுரம் வாயிலாகவோ, நாட்டில் கவனிப்புக்கு உரிய எழுத்தாளராகப் பெயர் பெற்று விடுகிறவர்களின் உழைப்பை உடனடியாக தனது பத்திரிகைக்குப் பயன்படுத்திக் கொள்வதற்குத் தொழிலதிபர் தயங்குவதும் இல்லை.

அந்தப் படைப்பாளிகளின் எழுத்து மக்கள் மத்தியில் கவர்ச்சி குன்றி விட்டது என்று தெரிந்த உடனேயே, பத்திரிகை அதிபர்கள் அவ்வெழுத்தாளர்களை ஒதுக்கிவிடத் தயங்கவும் மாட்டார்கள்.

பத்திரிகை வரலாறும், குறிப்பிட்ட சில எழுத்தாளர்களின் வளர்ச்சியும் சரிவும் இதை நிரூபித்தவாறு இருக்கின்றன.

எழுத்தாளர்கள், பத்திரிகைகள் தருகிற அன்பளிப்புக்காகவும், அப்பத்திரிகைகள் மூலம் வந்து சேர்கிற புகழின் போதையினாலும், பத்திரிகைகளுக்குத் தேவைப்படுகிற வகைகளில் எழுதிக் கொடுக்கத் தயாராகி விடுகிறார்கள்.

முற்காலத்தில் ‘ பத்திரிகைதர்மம் ’ என்று சில உயர்ந்த கொள்கைகள் கடைபிடிக்கப்பட்டன. அதே மாதிரி ‘எழுத்தாளர் தர்மம் ’ ‘ எழுத்தாளன் கர்வம் ’ என்றும் சிலசில போக்குகள் கையாளப்பட்டு வந்தன. அவற்றைக் காப்பாற்றுவதற்காக,

பத்திரிகைகளும் எழுத்தாளர்களும் கஷ்ட நஷ்டங்களைத் தாங்கிக் கொண்டு, மனஉறுதியோடு வாழ்ந்தார்கள்.

கால ஓட்டத்தில் வாழ்க்கை மதிப்புகள் பற்றிய கண்ணோட்டமே மாறிவிட்டது. பணமும் புகழும், சுகவாழ்வும் தான் சமூக வாழ்வில் முக்கியம் என்ற எண்ணமே பெரும் பலருக்கும் ஏற்பட்டு விட்டது. எழுத்தாளர்களும் மனிதர்கள் தானே. அவர்களிடமும் இவ் இயல்புகள் மேலோங்கி வளர்கின்றன.



## 4

வாசகர்கள் எல்லோருமே எழுத்தின் தரம் அறிந்தும், நயம் உணர்ந்தும் படிப்பதில்லை.

சராசரி வாசகர்கள் — சாதாரண வாசகர்கள் — பெரும் பலர் எழுதியவர் யார் என்றுகூட அக்கறைப்படுவதில்லை. பொழுதுபோக்கிற்காகப் படிக்கிறவர்கள், அன்றாட அலுவல்களின் சிரமத்திலிருந்து சும்மா ஒரு மாறுதலுக்காகப் படிக்கிறவர்கள் தூக்கம் வருவதற்காக எதையாவது படிக்கிறவர்கள் — இப்படி எத்தனையோ ரகங்கள். கண்டதை எல்லாம் படித்துப் படித்து தான் ருசி வளர்கிறது. சிறிது சிறிதாக நல்ல விஷயங்களைத் தேடி, தரம் அறிந்து படிக்கக்கூடிய பக்குவம் உண்டாகிறது.

இந்த விதமாக ரசனைத் தேர்ச்சி பெற்றவர்களில் பலர் கூட, இன்றையப் பத்திரிகைகளில் பயனுள்ள விஷயங்கள்

இல்லை; மட்டமான விஷயங்கள், பண்பாட்டை சிதைத்துச் சீரழிய வைக்கும் கதை கட்டுரைகள், இளம் உள்ளங்களை வெகு-வாக பாதிக்கக்கூடிய சமாச்சாரங்களே அதிகம் இருக்கின்றன என்று சொல்லிக் கொண்டு, ஒவ்வொரு வாரமும் அதே பத்திரிகைகளை ஆவலுடன் நாடுகிறார்கள்.

பெரும்பாலான வாசகர்களைப் பொறுத்தவரை, குறிப்பிட்ட சில பத்திரிகைகளை வாசிப்பது ஒரு போதை மாதிரி ஆகி விட்டது.

பல பேருக்குக் காலையில் எழுந்தவுடன், ஹிண்டு பத்திரிகை பார்க்கா விட்டால் 'என்னவோ போலிருக்கிறது' என்ற உணர்வு ஏற்படும். அதே மாதிரி வார முடிவில், ஒவ்வொரு வாரமும் குறிப்பிட்ட சில பத்திரிகைகளை படித்தே ஆக வேண்டும் என்ற உணர்வு ரொம்பப் பேருக்கு இருக்கிறது. அப்படி ஒரு சுவையை 'மசாலாப் பத்திரிகைகள்' மக்களிடையே வளர்த்து விட்டன.

தரமான விஷயங்களைப் படித்து ரசிக்கிற வாசகர்கள் அவை பற்றி நண்பர்களுக்குச் சொல்கிறார்கள். பத்திரிகைகளில் தரம் குறைந்த விஷயங்களே வருகின்றன என்று காரமாகப் பேசுகிறார்கள். ஆனாலும், அந்தப் பத்திரிகைகளை வாங்காமல் இருப்பதில்லை.

இந்த நிலை மாற வேண்டும். தரம் குறைந்த விஷயங்-களை வெளியிட்டுக் கொண்டிருக்கிற பத்திரிகைகளை அவர்கள் வாங்காமலே இருக்க வேண்டும். மற்றவர்களுக்கும் சொல்ல வேண்டும்.

விற்பனை குறைந்தால் தான், வணிக நோக்குப் பத்திரிகையாளர்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொள்வது

பற்றி யோசிப்பார்கள். விற்பனை கணிசமாக இருக்கிற வரை, அவர்கள் இதே வழிமுறைகளைத் தான் கையாள்வார்கள்.

அவ்வப்போது, அங்கங்கே, எதிர்ப்பு இயக்கங்கள் வாசகர்கள் சிலரால் மேற்கொள்ளப்பட்டது உண்டு. ஒவ்வொரு வாரத்திய இதழையும் பார்த்து, மோசமான—ஆபாசமான— விஷயங்களையும் படங்களையும் சுட்டிக்காட்டி, கண்டித்து அந்த அந்தப் பத்திரிகைகளுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள் ஒரு குழுவினர்.

'இலக்கியச் சிந்தனை' கூட்டங்களில் ஒவ்வொரு மாதமும், வணிக நோக்குப் பத்திரிகைகளின் மோசமான போக்குகளை விமர்சகர்கள் காரசாரமாகவும், குத்தல்கள் கிண்டல்களோடும், எடுத்துச் சொல்கிறார்கள்.

இந்த விதமான செயல்கள் பத்திரிகைகளின் போக்கை மாற்றி விடுவதில்லை. அவை கூட தங்கள் பத்திரிகைக்கு விளம்பரம் தான் என்று கருதும் மனநிலை தொழில் அதிபர்களுக்கு இருக்கிறது.

ஒரு சமயம் 'சுட்டி' என்ற சிறு பத்திரிகை, 'மசாலாப் பத்திரிகைகள்' போக்கைக் கண்டித்து, விமர்சன ரீதியில் கட்டுரைகள் வெளியிட்டது. 'குமுதம்' பற்றி வெளிவந்த கடுமையான விமர்சனத்தை 'குமுதம்' பெருமையாக எடுத்து ஒரு இதழில் பிரசுரித்து மகிழ்ந்தது.

விற்பனை குறைந்தால் தான் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு மனசில் படும். அதுவரை அவர்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ள மாட்டார்கள்.

அந்த நிலை ஏற்படுவதற்கு வாசகர்களின் தரம் பெரும் அளவில் உயர்ந்தாக வேண்டும். அவர்களது ரசனையை சரியான வழியில் திருப்புவதற்கு, தரம் அறிந்து படித்து மகிழும் ரசிகர்கள் உதவ வேண்டும்.

பல ஊர்களில் சிறிய அளவில் இம்முயற்சி நடந்து கொண்டிருக்கிறது என்பது மகிழ்ச்சிக்கு உரியது. வாசகர் வட்டம், ரசிகர் மன்றம், இலக்கியக் கழகம் என்ற பெயர் களில், வாசகர்கள் அவ்வப்போது கூடி, விமர்சனம் செய்து, விவாதித்து, ரசனை உணர்வை வளர்க்கிறார்கள். கலை இலக்கியப் பெருமன்றம், முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்ற அமைப்புகளும் நாடு நெடுகிலும், நல்ல இலக்கிய உணர்வை வளர்க்கவும், நசிவு இலக்கியப் போக்குகளை சுட்டிக் காட்டவும் பணியாற்றிக் கொண்டிருக்கின்றன.

இம் முயற்சிகள் இன்னும் வலுப் பெற வேண்டும். வாசகர்களிடையே ரசனை உணர்வு நல்ல முறையில் வளர்வ- தற்கு, ஆரோக்கியமான விமர்சனங்கள் தேவை. 'சோலை இயக்கம்' முக்கியமான நகரங்களில் ஏற்பாடு செய்த 'எழுத்தாளர் உறவு' க் கூட்டங்கள் இவ் வகையில் நல்ல பணியாற்றியுள்ளன என்பது குறிப்பிடத் தகுந்தது.

வாசகர்களின் தரம் உயர்வதற்கும், எழுத்து – கலை - கலாச்சாரம் முதலியன நல்ல முறையில் வளர்வதற்கும், 'சிறு பத்திரிகைகள்' எவ்வளவோ செய்ய முடியும். செய்ய வேண்டும்.



# 5

அறிவு விழிப்பு, சிந்தனைத் தெளிவு, நல்ல இலக்கியம் கலை முதலியவற்றில் ஈடுபாடு, புதிய புதிய விஷயங்களை அறிந்து கொள்ளும் அவா, திறமைகளை அறிந்து வளர்த்தல், புதிய சோதனைகளுக்கு ஊக்கம் அளித்தல், இளைய எழுத்தாளர்கள் வளர்ச்சி பெறுவதற்குத் தளம் அமைத்தல், சமூக உணர்வை வளர்த்தல் — இவ்வாறு பல வழிகளிலும் 'சிறு பத்திரிகை'கள் சாதனைகள் புரிய இயலும்.

கவி சுப்பிரமணிய பாரதியார், வ.வெ.சு. ஐயர் முதலியவர்கள் நடத்திய சிற்றிதழ்களும், 1930களில் தோன்றி வளர்ந்த பல பத்திரிகைகளும், அவற்றின் வழிநடந்த 1940 காலச் சிறு ஏடுகளும் இம் முறைகளில் தங்களால் இயன்ற அளவு செயலாற்றியுள்ளன. இது வரலாறு.

அவை எல்லாம் தன்மையினல் 'சிறுபத்திரிகை' என்று கருதப்பட வேண்டியவை. நடைமுறையில், அவையும் வியாபார ரீதியிலும் வெற்றிகரமாக வளர முடியுமா என்ற பரிசோதனையிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தன. ஆயினும் அவற்றில் எதுவும் வியாபார வெற்றி பெற முடிந்ததில்லை.

உண்மையிலேயே 'சிறு பத்திரிகை, என்ற ரகத்தைச் சேர்கிற பத்திரிகை முயற்சி தமிழ் நாட்டில் 1960களில் தான் ஆரம்பமாயிற்று.

விற்பனை பற்றி யோசிக்காது— ஏஜன்சி அல்லது பிறர் சகாயம் மூலம் அதிகபட்ச வாசகர்களை எட்ட

ஆசைப்படாது—குறைந்த அளவு பிரதிகள் மட்டுமே அச்சிட்டு, கனமான, தரமான சிந்தனைபூர்வமான, அறிவுக்கு உணவாகக் கூடிய விஷயங்களை மட்டுமே கொடுப்பது; 500 வாசகர்களுக்குள் இருந்தாலே போதும் என்று வரையறுக்கப்பட்ட நோக்கத்துடன், எழுத்தாளர் சி. சு. செல்லப்பா 'எழுத்து' பத்திரிகையை ஆரம்பித்தார். இலக்கிய விமர்சனத்துக்காக என்று மட்டுமே துவக்கப்பட்ட இந்த மாத இதழ் 'புதுக்கவிதை, இயக்க ரீதியில் வளர்வதற்குத் துணைபுரிந்து வரலாற்றுப் பெருமை தேடிக் கொண்டது.

அதன் பிறகு, தனித்தனி நோக்குடன், பல சிறு பத்திரிகைகள் தோன்றின. இலக்கிய வட்டம், நடை கசடதபற, பிரக்ஞை – இப்படி பலப்பல.

புதுக்கவிதை வளர்ச்சி பெறவும், 'சமுதாயப் பார்வையோடு' கவிதைகள் படைக்கப்பட வேண்டும் என்ற எழுச்சியோடு 'வானம்பாடி' என்ற 'விலையிலாக் கவிதை ஏடு' தோன்றியது. இது காட்டிய வழியில் 'தனிச்சுற்றுக்கு மட்டும்' என்று அறிவித்து, சில நூறு பிரதிகளே அச்சாகக்கூடிய, சிறு பத்திரிகைகள் தமிழ்நாடு நெடுகிலும் பரவலாக எழுந்தன. சில ஆரம்ப வேகத்திலேயே வீழ்ந்து மறைந்தன. அநேகம் சில காலம் வரை வளர்ந்து, பின் தேய்ந்து மாய்ந்தன.

1970 களில், பல்வேறு நோக்கங்களோடு, சிறு பத்திரிகைகள் அதிக எண்ணிக்கையில் தோன்றின. அவற்றில் ஒரு சில தான் நீண்டகாலம் வாழ முடிந்திருக்கிறது. பல மூன்று இதழ்கள், இரண்டு இதழ்கள் வெளிவந்து நின்று விட்டன. ஒரே இதழுடன் நின்று போனவை பலவாகும்.

வெறும் உற்சாகத்துடன் பத்திரிகைத்துறையில் ஈடுபட்ட இளைஞர்களிடம் உள்ள குறைபாடுகளே இவற்றுக்கு

காரணம். பணபலம் இல்லாததால் பெரும்பான்மை முயற்சிகள் ஆரம்பத்திலேயே தோல்வி கண்டன.

சிறிது காலம் வளர முயன்றவை எல்லாமே சாதனைகள் புரிந்தன என்றும் சொல்வதற்கில்லை. பத்திரிகை ஆரம்பிக்கிற இளைஞர்கள் பலப்பல காரணங்களினால் அம் முயற்சியில் இறங்குகிறார்கள்.

தங்கள் எழுத்துக்கள் பெரிய பத்திரிகைகளில் இடம் பெறாமல் போவதால், நம் கதை கவிதை—கட்டுரைகளை நாமே வெளியிட சொந்தமாக ஒரு பத்திரிகை ஆரம்பிப்போம் என்ற வேகம் அநேக முயற்சிகளின் மூலகாரணமாக அமைகிறது. ‘கையெழுத்துப் பத்திரிகை’ நடத்துகிற இளைஞர்கள் அதை அச்சில் கொண்டு வர வேண்டும் என்று ஆசைப்பட்டு, சிறு பத்திரிகை தொடங்குவதும் சகஜமாக இருக்கிறது. யார் யாரோ பத்திரிகை நடத்துகிறார்கள்; நாமும் பத்திரிகை நடத்துவோமே!’ என்ற உந்துதல்; நாம் பத்திரிகை ஆசிரியர் என்று மதிக்கப்பட வேண்டும் என்ற ஆசை – இவ்வாறு பல காரணங்கள்.

இதனால், படித்துக் கொண்டிருக்கிற மாணவர்களும், படிப்பை முடித்து விட்டு சும்மா இருக்கிற இளைஞர்களும் பத்திரிகை ஆசிரியர்களாகி, தனித் தனிப் பத்திரிகைகள் ஆரம்பித்துவிடுகிறார்கள்.

இவர்களில் பெரும் பலருக்கு வாழ்க்கை அனுபவம், வாழ்க்கை மற்றும் மனிதர்கள் பற்றிய தனித்த நோக்கு, சிந்தனைத் திறம், விசாலப் பார்வை, ஆழமான படிப்பு, போதுமான கற்பனை முதலியவை இல்லை. அதனால், அவர்களது எழுத்தில் புதுமையும் ஆழமும் கனமும் இருப்பதில்லை. அவர்கள் பெரும்பாலும் வணிகநோக்குப் பத்திரிகைகளை ‘காப்பி அடித்தே’ தங்கள் பத்திரிகைகளைத் தயாரிக்கிறார்கள். எனவே, அவை

பயனுள்ள, நல்ல, உருப்படியான காரியம் எதையும் சாதிக்க முடிவதில்லை.

தனித்த பார்வை, ஏதேனும் தத்துவச் சார்பு, புதிய - அறிவார்த்த-விஷயங்களை கொடுக்கும் அவா முதலியவற்றோடு செயல்படுகிற சிறுபத்திரிகைகளில் பல குழு மனப்பான்மை கொண்டுவிடுகின்றன. எழுத்தாளர்களிடையே. இயல்பாகக் காணப்படுகிற 'Groupism' (குழுத் தன்மை – கோஷ்டி மனப்பான்மை) இப்பத்திரிகைகளிலும் பிரதிபலித்து, ஒவ்வொன்றும் தனிமைப்பட்டுப் போகின்றன. தனிநபர் வழிபாடு; படைப்புகளை விமர்சிப்பதை விட படைப்பாளியைத் தாக்குகிற போக்கு; புதிய விஷயங்களைத் தருகிறோம் என்று சாதாரண வாசகருக்குப் புரியாத சமாச்சாரங்களை அச்சிடுகிற இயல்பு போன்றவை இவற்றின் செயல் முறைகள் ஆக இருக்கின்றன.

இக் குறைபாடுகளையும் மீறி நல்ல சிறுகதைகளையும், நல்ல கவிதைகளையும், சிந்தனையை வளர்க்கக் கூடிய கட்டுரைகளையும் சிறுபத்திரிகைகள் தந்திருப்பது மகிழ்ச்சிக்கு உரியதாகும்.

சிறு பத்திரிகைகளின் ஆசிரியர்களாக விளங்க ஆசைப்படுகிற இளைஞர்கள் — பொதுவாக, எழுத்தாளர்கள் ஆக வளர்ந்து பிரகாசிக்க விரும்புகிற யாருமே—முதலில் அதற்காகத் தங்களைத் தாங்களே தயார்படுத்திக் கொள்ள வேண்டும்; தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அதற்கு, ஏராளமாகப் படிக்க வேண்டும். அறிவையும் சிந்தனைத் திறனையும் வளர்த்துக் கொள்வதற்காக நல்ல நல்ல புத்தகங்களைப் படித்துக் கொண்டே இருக்க வேண்டும். தற்காலத் தமிழ் எழுத்தாளர்களது எழுத்துக்களை

படிக்க வேண்டும். முந்திய தலைமுறைப் படைப்பாளிகள் பலரது எழுத்துக்களையும் படித்தாக வேண்டும். பழம் தமிழ் இலக்கிய அறிவும் அவசியம் தேவை ; அவற்றையும் சிறிது சிறிதாகப் படிப்பது நல்லது.

அப்போது தான் தமிழில் என்ன என்ன படைக்கப் பட்டிருக்கின்றன; புதிதாக இனி என்ன செய்யப்பட வேண்டும்; நம் பங்கிற்கு நாம் என்ன செய்யலாம் என்ற தெளிவு பிறக்கும்.

தமிழில் இதுவரை என்ன என்ன செய்யப் பட்டிருக்கின்றன – நமக்கு முந்தியவர்கள் எப்படிப்பட்ட சாதனைகள் புரிந்திருக்கிறார்கள் – என்பதைப் புரிந்து கொள்ளாமல், தெரிந்து கொள்ள விரும்பாமலே, 'தமிழில் புதியன படைக்கப்படவில்லை. நம்மால் தான் புதிதாக செய்ய முடியும். நாம் தான் தமிழை உலக இலக்கியத்தின் தரத்துக்கு உயர்த்தப் போகிறோம்' என்று பேசுவதும் எழுதுவதும் சில எழுத்தாளர்கள், கவிஞர்களின் இயல்பாக இருக்கிறது.

இந்த தற்சிறப்பு மோகமும், தன் அகங்காரமும் அவர்களுக்கும் நல்லது செய்யா; மொழிக்கும் சமூகத்துக்கும் நன்மை பயக்கமாட்டா.

படிப்பதோடு, இளைஞர்கள் அனுபவம் பெற முயல வேண்டும். மக்களோடு பழகி, மக்களைப் புரிந்து கொள்ள முயல வேண்டும். 'விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை, உலகை!, என்பது கவிவாக்கு. வாழ்க்கையை பாடநூலாகவும் மனிதர்களை பாடங்களாகவும், அனுபவத்தை ஆசான் ஆகவும், உலகத்தைப் பெரிய பல்கலைக்கழகமாகவும், தன்னை நிரந்தர மாணவன் ஆகவும் கொண்டு, தளராத தன்னம்பிக்கை யோடும் குறையாத ஆர்வத்துடனும்- குன்றாத ஊக்கத்தோடு-

சலியாத உழைப்போடும் எழுத்துத் துறையில் ஈடுபடுகிறவர்கள் நிச்சயம் வெற்றிபெற முடியும். அவர்களுடைய, எழுத்தும், அவர்கள் நடத்துகிற பத்திரிகையும் தனித் தன்மையோடு; பயனுள்ள முறையில் ஒளிர்வது சாத்தியமாகும்.



## 6

தமிழ்நாட்டில், வியாபார நோக்குடன் நடத்தப்படுகிற பத்திரிகைகள் லட்சம் லட்சமாக வாசகர்களைத் தயாரித்து விட்டிருக்கின்றன.

ஆனாலும், கனமான, சிந்தனைக்கு வேலைவைக்கிற, அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரிகிற, மக்களுக்கும் சமூகத்துக்கும் நல்லது செய்யக்கூடிய, ஆழ்ந்த விஷயங்களைக் கொண்ட புத்தகங்களையும், இலக்கியப் பத்திரிகைகளையும் விரும்பிப் படிக்கிற வாசகர்களின் எண்ணிக்கை ஒரு சில ஆயிரத்துக்குள் அடங்கி விடுகிறது.

வாரம் தோறும், சில பத்திரிகைகள், பல லட்சம் பிரதிகள் அளவில் விற்பனையாகிற போது, நல்ல புத்தகங்கள்—நாவல், சிறுகதை, கட்டுரைத் தொகுப்புகள்—ஆயிரம் பிரதிகள் விற்பனையாவதற்கு நான்கு வருட காலம் தேவைப்படுகிறது. இது ஒவ்வொரு பிரசுரகர்த்தரின் அனுபவமாக இருந்து வருகிறது.

இந்த நிலைமை மொழிக்கும் நாட்டுக்கும் பெருமை தரக் கூடியதாக இல்லை.

இந் நிலைக்கு பத்திரிகைகள், எழுத்தாளர்கள், நாட்டின் மக்கள் ஆகிய மூன்று சாராருமே காரணமாவர்.

எழுத்தாளர்கள், 'பணத்துக்காகத் தான் எழுதுகிறோம்', 'புகழ் பெறுவது சந்தோஷமாக இருக்கிறது; மனநிறைவு தருகிறது' என்ற நோக்குடன் எழுதுவதைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அடியோடு விட்டு விடுவது என்பது சாத்தியமற்றது. பணம் தேடுவதும், புகழை நாடுவதும் மனித இயல்புகள் தான். எனினும், பணத்துக்காகவும், புகழுக் காகவும், தங்களை அடிமையாக்கிக் கொண்டு, சமுதாய உணர்வைப் புறக்கணித்து விட்டு, கலாச்சாரச் சீரழிவைப் பரப்புகிற எழுத்துக்களைப் படைப்பதைத் தவிர்க்க வேண்டும். கலை நயமும் தரமும் நிறைந்த எழுத்துக்களை, எளிய இனிய அழகிய முறையில் மக்களுக்குப் பிடிக்கக் கூடிய விதத்தில் எழுத வேண்டும்.

அவை போன்ற படைப்புக்களை, வியாபார வெற்றி கண்டுள்ள பெரிய பத்திரிகைகள், தர முன்வரவேண்டும். வழக்கமான மசாலாத் தனங்களோடு, தரமான உயர்ந்த விஷயங்களையும் ஒரு அளவில் கலந்து கொடுத்து வந்தால், வாசகர்களுக்கு அவற்றின் மீதும் சுவை ஏற்படுத்த முடியும்.

மக்களின் கல்வி அறிவு பெருக வேண்டும். எண்ணிக்-கையில் பெருகி உள்ள வாசகர்களிடையே தரம் உணர்ந்து படிக்கக் கூடியவர்கள் தொகை பெருக வேண்டும்.

இதற்குப் பத்திரிகையாளர்கள் தான் பெரிதும் உதவ முடியும்.

பத்திரிகைகள், பொதுவாக, மக்களுக்கு விஷயங்களை எடுத்துக் கூறுவதற்காக ஏற்பட்டவை. வம்பளப்பு

அக்கப்போர் ரீதியில், கொலை, தற்கொலை, கொள்ளை, கற்பழிப்பு, விபத்துகள் முதலிய செய்திகளைப் பெரிதுபடுத்தி, எடுப்பாகக் கொடுத்துக் கொண்டிருப்பது மட்டுமே பத்திரிகைகளின் கடமை இல்லை.

மனித மாண்பு வெளிப்படுகிற செயல்களையும், சாதனை வீரர்களின் செயல் முறைகளையும், உலகத்தின் சகல பகுதி களிலும் வசிக்கிற மக்களின் வாழ்க்கை முறைகளையும், பழக்கவழக்கங்கள், கலாச்சாரம் போன்றவற்றையும் - அறிமுகப்படுத்துவதன் மூலம், மக்களின் அனுபவத்தையும்- அறிவையும் விசாலப்படுத்த வேண்டியதும் பத்திரிகையாளர் பொறுப்பு தான்.

நாளிதழ்கள் கூட இப்படிப்பட்ட சிறப்புக் கட்டுரைகளைப் பிரசுரிக்கலாம். ஒரு சில இதழ்கள் இவ்வகையில் செயலாற்றுவது பாராட்டுதலுக்கு உரியது.

ஆனால், பொதுவாக, நாளிதழ்கள், எண்ணிக்கையில் அதிகரித்திருந்த போதிலும், நாட்டின் நிகழ்ச்சிகளையும், உலக சமாச்சாரங்களையும் ஒருவர் போதுமானபடி அறிந்து கொள்ளக் கூட உதவிபுரியவில்லை.

'கட்சிப் பத்திரிகைகள்' அந்த அந்தக் கட்சிகள், கட்சித் தலைவர்கள், சம்பந்தமான செய்திகளை மட்டுமே தருகின்றன.

மாவட்டம் தோறும் தனித் தனிப் பதிப்புகள் என்று ஆகிவிட்ட பிறகு, அந்தந்த மாவட்டச் செய்திகள் மட்டுமே, சம்பந்தப்பட்ட பத்திரிகைகளில் பிரசுரம் பெறுவது வழக்கமாகி விட்டது. முக்கியமான செய்திகள் கூட சகல பதிப்புகளில் இடம் பெறுவதில்லை. இதர மாநிலச் செய்திகள், உலக விசேஷச் செய்திகள் இவற்றில் தலைகாட்டுவதேயில்லை.

எனவே பரவலாக நாட்டின் - உலகத்தின் - செய்திகளை தெரிந்து கொள்ள விரும்புகிற ஒருவர் ஒரு பத்திரிகை மட்டும் படித்தால் போதாது; அநேக பத்திரிகைகளைப் பார்க்க வேண்டும் என்ற கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

அப்படியே பார்த்தாலும் முழுமையாக விஷயங்களை தெரிந்து கொண்ட நிறைவு ஏற்படுவதும் இல்லை.

தற்காலத்தில், அனைத்துப் பத்திரிகைகளும் விஷயத்துக்கு அளிக்கிற முக்கியத்துவத்தை விட விளம்பரங்-களுக்கே அதிக கவனிப்பும் முக்கியமும் தருகின்றன. காரணம், விளம்பரங்களின் மூலம் அவற்றுக்கு நல்ல வருமானம்; அதனால் பத்திரிகை அதிபர்களுக்கு அதிக லாபம் கிடைக்கிறது.

சுதந்திரம் பெற்ற பிறகு, நாட்டில் எத்தனையோ மாறுதல்களும் வளர்ச்சிகளும் ஏற்பட்டுள்ளன; இப்பவும் ஏற்பட்டவாறு இருக்கின்றன. அவற்றில் அநேகம் உண்மையான வளர்ச்சியாக, மக்களின் வாழ்க்கையை வளப் படுத்துவனவாக இல்லை.

பத்திரிகைத் துறையில், கால ஓட்டத்தில், ஏற்பட்டு வந்திருக்கிற மாற்றங்களும் வளர்ச்சியும் அப்படிப்பட்டவை தான்.





# 1

தற்காலத்தில் பத்திரிகைகள் நிறைய வருகின்றன. நாளிதழ்கள், வாரப் பத்திரிகைகள், மாதம் இருமுறை வெளியீடுகள், மாத சஞ்சிகைகள். 'மாதம் ஒரு நாவல்' வெளியீடுகள். மற்றும், எண்ணற்ற சிறு பத்திரிகைகள், காலாண்டு ஏடுகள்.

எழுத்தாளர்களும் அதிகம் பேர் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருடைய எழுத்துக்களும் பத்திரிகைகளில் இடம் பெற்று விட முடிவதில்லை.

குறிப்பிட்ட சில எழுத்தாளர்களின் எழுத்துக்கள், ஒரே சமயத்தில், பல பத்திரிகைகளில் வெளிவருவதைக் காணமுடிகிறது.

அந்த குறித்த சில எழுத்தாளர்களின் எல்லா விதமான எழுத்துக்களும் பத்திரிகைகளில் அச்சாகி விடும் என்று சொல்வதற்கில்லை. அதாவது, அவர் தனது இஷ்டம் போல, தனது ஆற்றலைக் காட்டுவதற்காகவோ, இந்த மாதிரி எழுத்துக்கள் தான் மக்களுக்கு நல்லது என்ற நோக்குடனோ' எதையாவது எழுதினால், அவை பத்திரிகைகளில் பிரசுரமாகும் என்ற நிச்சயம் எதுவும் இல்லை.

பத்திரிகைகளின் தேவைக்குத் தக்கபடி, தங்கள் வாசகர்களுக்கு எவை பிடிக்கும் என்று பத்திரிகை நடத்து கிறவர்கள் நிர்ணயித்திருக்கிறார்களோ அந்த அளவுகளுக்கு —

ருசிக்கு – உட்பட்டவாறு எழுதப்படுகிற எழுத்துக்களைத் தான் வெகுஜனப் பத்திரிகைகள் ஏற்றுக் கொள்ளும்.

இன்றைய வாசகர்கள் இன்னின்ன விதமான கதை கட்டுரைகளைத் தான் விரும்பி வரவேற்கிறார்கள் என்று, விற்பனை அடிப்படையில், வெற்றிகரமான வணிகப் பத்திரிகைகள் முடிவு செய்து வைத்திருக்கின்றன. அந்த அடிப்படையிலேயே கதைகளும் இதர விஷயங்களும் தயாரிக்கப்பட வேண்டும் என்று பத்திரிகை நடத்துகிறவர்கள் வலியுறுத்துகிறார்கள்.

புகழ் பெற்ற எழுத்தாளர்களும், சராசரி எழுத்தாளர் களும் பத்திரிகைக்காரர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தயாராக இருக்கிறார்கள். அதே வேளையில், தாங்கள் சுதந்திரமாக இயங்குவதாகவும் சொல்லிக் கொள்கிறார்கள்.

பத்திரிகைகளின் பக்கங்கள் நிரம்புவதற்கு எழுத்தாளர்களின் எழுத்துக்கள் தேவை தான். ஆனால், எழுத்தாளர்களின் சுய சிந்தனை ரீதியான – அவரவர் நோக்கிற்கும் கொள்கைகளுக்கும் ஆற்றலுக்கும் ஏற்றபடி எழுதப் படுகிற – சுதந்திர எழுத்துக்கள் தேவையில்லை, புதுமையான, சோதனை ரீதியான – கனமான, ஆழ்ந்த படைப்புக்கள் தேவையில்லை. இப்படி பத்திரிகை நடத்து கிறவர்கள் தீர்மானித்து விட்டார்கள்.

எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். அவர்கள் எழுதுகிறவை வாசகர்களை எட்ட வேண்டும். அதற்கு பத்திரிகைகளின் துணை தேவை. பெரும்பாலானவர்களுக்கு இவ்வாய்ப்பு கிட்டுவதில்லை என்ற நிலைமையே தற்காலத்தில் நிலவுகிறது.

பத்திரிகை ஒரு தொழிலாகக் கருதப்பட்டு, லாபகரமான முறையில், பெரிய அளவில் வளர்க்கப்பட்டு விட்டது நாட்டில்.

லாபம் தரக்கூடிய தொழில் முயற்சியில் போட்டியிட்டுக் கொண்டு பண அதிபர்கள் ஈடுபடுவது இயல்பு. அந்த ரீதியில் பத்திரிகைத் துறையிலும் ஒன்றை பின்பற்றி ஒன்று, இரண்டு, மூன்று என்று பலப்பல பத்திரிகைகள் நடத்தப் பட்டு வருகின்றன,

ஆனல், எழுத்து தொழில் முறையில் வளர்வதில்லே. எழுத்தை ஒரு தொழிலாகக் கொண்டு பலப்பலர் வாழ்க்கை நடத்த இயலாது.

எழுத்தை தொழிலாக ஏற்று, திட்டமிட்டு, இயந்திர ரீதியில் உழைத்து, வெற்றி காண முயல்கிருர்கள் ஒரு சில எழுத்தாளர்கள். குறித்த சில காலத்துக்கு வெற்றியும் அடைகிருர்கள். பத்திரிகைகளின் தேவைகளே அவர்கள் பூர்த்தி செய்து கொண்டிருக்கிற வரை அவர்கள் ஒளிமயமாகப் பிரகாசிக்கிருர்கள்.

ஒருவரைப் போலவே வேறு சிலர் எழுத்தில் வெற்றிகர மாக வளர்ந்து, போட்டியிட்டு, பத்திரிகைகளுக்காகத் தனி உத்திகளேக் கையாண்டு, தங்கள் எழுத்தை வசீகரமும் கவர்ச்சியும் இனிமையும் புதுமையும் நிறைந்ததாகச் செய்து, வாசகர்களின் அபிமானத்தைப் பெறுவது சாத்தியமாகி விடுகிறது.

இந்நிலேயில், பத்திரிகைப் பிரதிகளின் அதிகபட்ச விற்பனேயிலேயே கண்ணுகை இருக்கிற பத்திரிகை அதிபர்கள் – எப்பவும் வாசக உலகின் நாடியை - பத்திரிகையின் சர்குலேஷனின் ஏற்ற இறக்கங்களே வைத்துக் கணக்கிட்டுக்

கொண்டிருப்பவர்கள் — எழுத்தாளர்களுக்கு ஆ த ர வு தருவதையும், அவர்களை ஒதுக்கி விடுவதையும், காலத்தின் தேவைக்குத் தக்கபடி செய்வதில் கருத்தாக இருக்கிறார்கள்.

ஆகவே, வெற்றி பெற்ற எழுத்தாளர்கள் பத்திரிகை அதிபர்களின் நல்லெண்ணத்தைத் தொடர்ந்து பெற்றிருப்பதிலும், அதற்காக சம்பந்தப்பட்ட பத்திரிகை ஆசிரியரின் தயவை அடைவதிலும் கவனம் செலுத்தி வர வேண்டியதும் அவசியமாகிறது.

இந்த விதமான 'யுகதர்மங்களை' பின்பற்ற விரும்பாதவர்கள் — கையாளத் தெரியாதவர்கள் — ஒதுக்கப்பட்டு விடுகிறார்கள்; பின்தங்கிப் போகிறார்கள்.

இவ்விதம் எழுத்துத்துறையில் வெற்றிகரமாக முன்னேற நேர்ந்திருக்கிற எழுத்தாளர்களில் பலரும் எழுத்தை மட்டுமே நம்பி வாழ்கிறவர்கள் இல்லை என்பதும் ஒரு உண்மை ஆகும். நல்ல, நிரந்தரமான, மாத வருமானத்துக்கு வகை செய்கிற பெரிய வேலை ஏதாவது பார்க்கிற நபர்களாகத் தான் அவர்கள் இருக்கிறார்கள்.

இவர்களில் சிலர், வாழ்க்கை வசதிகளையும் சுகபோகங்களையும் அதிகப்படுத்திக் கொள்வதற்கு மேலும் பணம் தேவை; இப்படி எழுதுவதால் பணம் கிடைக்கிறது என்பதனால், பணத்துக்காகவே எழுதுகிறோம் என்று தயங்காது அறிவிக்கிறார்கள். சிலர் புகழ் போதையினால் 'பத்திரிகை எழுத்துக்களை' உருவாக்குவதில் ஆர்வமும் உற்சாகமும் உடையவர்களாக இருக்கிறார்கள்.

எழுத்தை மட்டுமே நம்பி, அதையே ஒரு தொழிலாக ஏற்றுக் கொண்டவர்கள் பத்திரிகைகளின் தேவைகளுக்குத்

தகுந்தபடி எழுத விரும்பாதவர்கள் - சிரம வாழ்க்கையை தெரிந்தே கைக்கொள்ளுகிறார்கள் என்று தான் சொல்ல வேண்டும்.

நாற்பது, முப்பது வருடங்களுக்கு முன்பு சொல்லப் பட்டது — தமிழ் நாட்டில் எழுத்தை நம்பி வாழ முடியாது; எழுத்து அன்றாட வாழ்க்கைத் தேவைகளுக்குப் போதுமான அளவு பணவசதி கூட பெற்றுத் தராது என்று.

எழுத்தில் சாதனை புரிந்தவர்கள் என்று பெயர் பெற்ற பெரிய எழுத்தாளர்களின் வாழ்க்கை கூட வறுமை நிலைப் பட்டதாகவே இருந்தது. சாதாரண எழுத்தாளர்களின் நிலைமை பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

அன்று பத்திரிகைகள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தது இல்லை. பெரிய பத்திரிகைகள் கூட தாராளமான 'சன்மானம்' எழுத்தாளர்களுக்குக் கொடுத்ததில்லை. பெரும்பாலான பத்திரிகைகள் எழுத்தாளர்களுக்கு எவ்விதமான 'அன்பளிப்பு'ம் தந்தது கிடையாது.

தற்காலத்தில் பத்திரிகைகள் அதிகம். அவை தாராள மாகவே 'அன்பளிப்பு' வழங்குகின்றன.

ஒரு சிறு கதைக்கு ரூ. 150 – ரூ. 100 என்றெல்லாம் கொடுக்கப்படுகிறது. இளைய எழுத்தாளரின் கதைக்குக் கூட ரூ. 80 — குறைந்த பட்சம் ரூ. 60 - வாரப் பத்திரிகைகளால் தரப்படுகிறது.

'மாத நாவல்' என்று வெளியிடுகிற மாதப் பிரசுரங்களில் சில ஒரு நாவலுக்கு இரண்டாயிரம் ரூபாய் தருகின்றன. மற்றவை ஆயிரம் ரூபாய் கொடுக்கின்றன.

இவை எல்லாம் கவர்ச்சி அம்சங்களாகத் தோன்று கின்றன.

என்றாலும், தமிழ் நாட்டில் எழுத்தாளர்களின் நிலை பரிதாபத்துக்குரியதாகத் தான் இருக்கிறது.

இவை எல்லாம் பத்திரிகைகளின் ஆதரவையும், பத்திரிகை அதிபர்களின் நல்லெண்ணத்தையும் பெற்று விடுகிற குறித்த ஒரு சில எழுத்தாளர்களுக்கே கிடைக்கக் கூடிய வாய்ப்பு தான் இருக்கிறது.

திறமையுள்ள, இலக்கியத் தரமான கதைகள் எழுதுகிற, எழுத்தாளர்களின் எழுத்துக்கள் இப்பத்திரிகைகளிலும் மாத வெளியீடுகளிலும், இடம் பெறுவதேயில்லை. அதாவது, புதுமையான எழுத்துக்கள், தரமான ஆழ்ந்த இலக்கியப் படைப்புகள், சோதனை ரீதியான சிருஷ்டிகள், நடை (ஸ்டைல்) - குணசித்திரம் - உணர்ச்சி – உளஇயல் போன்ற அம்சங்களில் அக்கறை காட்டுகிற சொற் சித்திரங்கள் தற்காலப் பத்திரிகைகளுக்குத் தேவை இல்லை. இந்த ரகமாக எழுதிக் கொண்டிருப்பவர்கள் பிரசுர வாய்ப்பைப் பெறுவதே இல்லை.

ஆகவே, இந்த ரகமான எழுத்தாளர்கள் எழுத்து மூலம் எவ்வித வருமானமும் பெற முடியாத நிலையிலேயே இருக்கிறார்கள்.

அதனால் அவர்கள் ஏதாவது ஒரு நிறுவனத்தில் வேலை தேடிக் கொண்டு உழைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சிலர் பத்திரிகை அலுவலகங்களில் பணிபுரிவதில் ஆர்வம் கொள்கிறார்கள். எழுதுவதை ஓய்வு நேரத்தில் கவனிக்கலாம் எனக் கருதுகிறார்கள்.

பொதுப்படையான தொழில் நிறுவனங்களில் சேர்ந்தாலும் சரி, பத்திரிகை ஆபீஸ்களில் உதவியாளனாக உழைக்கப் போனாலும் சரி,- அவர் எட்டு மணி நேரம், பத்து மணி நேரம் உழைக்க வேண்டியதாகிறது. சிலர், ஆபீஸ் வேலைகளை வீட்டுக்குக் கொண்டு வந்தும் செய்ய நேரிடுகிறது.

இப்படி உழைத்து விட்டு வீடு சேர்ந்ததும், ஓய்வாகப் படுத்துக் கிடக்கத் தான் 'மூட் இருக்குமே' தவிர, எழுத எழுச்சி ஏற்படுவதில்லை. இது பொது நியதி.

பத்திரிகை அலுவலகத்தில், உதவி ஆசிரியர் என்றோ, 'ஆசிரியர் குழு'வில் ஒருவர் எனவோ, சேர்ந்து, உழைக்க வேண்டும் என்று 'சுயேச்சை எழுத்தாளர்' களில் அனேகர் ஆசைப்படுகிறார்கள்.

பத்திரிகை ஆபீஸ் வேலை, பொதுவாக, எழுத்தாளர்களுக்குத் தனிப் பெருமை தரக்கூடியதாக இல்லை. நிறுவன அமைப்புகளோடு, சீராக இயங்குகிற, ஒரு சில பத்திரிகைகளில் உதவி அலல்து துணை ஆசிரியர் வேலை என்பது விரும்புதற்கு உரியதாய் — மகிழ்ச்சி அளிக்கக் கூடியதாக – இருக்கலாம்.

ஆனால், பொதுவாக, பத்திரிகை அலுவலகங்களில் உதவி ஆசிரியர் என்பவர் புரூஃப் திருத்துகிறவர் - தபாலில் வருகிற கடிதங்களைப் பிரித்துப் பதிவு செய்து உரியவரின் கவனத்துக்குக் கொண்டு வருபவர் – தபாலில் வரும் கதைகளைப் படித்துப் பார்த்து அவை மீது கருத்து அறிவிக்கிறவர் என்ற நிலையில் தான் செயல் புரிய வேண்டியிருக்கிறது.

சில பத்திரிகை ஆபீசில் உதவியாகச் சேர்கிற எழுத்தாளர்களது எழுத்துக்கள் – அவர்கள் எவ்வளவு

திறமையாளராக இருந்த போதிலும்; அவர்களுடைய கதை, கவிதை, கட்டுரைகள் பெருமளவு கவனிப்பதையும் பாராட்டு-தலையும் பெற்றிருந்தாலும் கூட—அவர்கள் வேலை பார்க்கிற பத்திரிகையில் இடம் பெறுவதில்லை. ஆசிரியப் பொறுப்பில் இருப்பவர்கள், அவர்களது எழுத்துக்கள் அவ்விதம் வெளிவந்து கவனிப்பைப் பெறவிடாதபடி கவனித்துக் கொள்கிறார்கள்.

அவர்கள், ஒரு பத்திரிகையில் பணி புரிகிற போது, இதர பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்பவும் கூடாது. இதனால், ஆற்றல் நிறைந்த எழுத்தாளர், ஒரு பத்திரிகை அலுவலகத்தில் வேலைக்குச் சேர்வதனால், ஒரு திட்டமான மாத வருவாய்க்காக, தன்னைத் தானே இருட்டடிப்புக்கு உள்ளாக்கிக் கொள்கிறார் என்று தான் ஆகிறது.

இச் சூழ்நிலையில் 'எழுத்தாளருக்கு சுதந்திரம் இருக்கிறது நம் நாட்டிலே!' என்று பெரும் பேச்சு பேசப் படுவதிலும் குறைச்சல் இல்லை,

நிலைமைகள் இவ்வாறெல்லாம் இருப்பினும், எழுத்தாளன் ஆக வேண்டும் என்ற ஆசை இளைஞர்களைப் பிடித்து ஆட்டுவித்துக் கொண்டே தான் இருக்கிறது. எழுத்தாளனாகவே வாழ வேண்டும் என்ற ஒரு வேகம் சில பேரைப் பற்றிக் கொண்டு, அவர்களுடைய வாழ்க்கையே வீணாகிப் போகும் படியான காரியங்களை செய்யத் தூண்டுகிறது.

சிலர் எழுத்துத் துறையில் பெற்று விடுகிற பகட்டான வெற்றிகளைக் கண்டு, நாமும் இப்படி எல்லாம் வளர்ந்து பெயரும் புகழும் பணமும் பெற்று, பிரபலங்களாக உலா வர முடியும் என்று அநேக இளைஞர்கள் ஆசைக் கனவுகள் காண்கிறார்கள். சில கவிதைகளை அல்லது கதைகளை

எழுதி விடுவதனால் தங்களுக்கு எழுத்துலகில் வெற்றிப் பாதை சுலபமாகக் கிட்டிவிடும் என்று நம்புகிறவர்கள் எத்தனை பேர்!

இந்த நம்பிக்கையால், ஆசையால், தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிற நிரந்தரமான வேலையை உதறி எறிந்து விட்டு, சென்னைக்கு வந்து பத்திரிகை அலுவலகங்களின் வாசல்படிகளை ஏறி இறங்கித் தவம் புரிந்து கொண்டிருப்பவர்களும் காணப்படுகிறார்கள்.

பிரபலப் பத்திரிகைகளில் தொடர் கதைகள் எழுதி வாசகர்களின் பாராட்டுதல்களை அமோகமாகப் பெற்ற எழுத்தாளர் – அவை புத்தகங்களாக வெளி வந்து நல்ல நாவலாசிரியர் எனும் சிறப்பைப் பெற்றவர் – பத்திரிகை ஆசிரியர் – இலக்கியக் கூட்டங்களில் சபாரஞ்சகமாகப் பேசி ரசிகர்களின் கைதட்டல்களை ஏகமாகப் பெறுகிறவர் – பல வருடங்களாக எழுத்தாளராக வாழ்ந்து சிரமங்களை எதிர் கொள்ளும் அன்பர்: அவர் ஒரு சமயம் குறிப்பிட்டார், ஒரு நண்பரை சுட்டிக் காட்டியபடி – 'அதோ இருக்கிறாரே அவர் நல்ல நிறுவனம் ஒன்றில் நல்ல சம்பளத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். பத்திரிகைகளுக்கு எழுதினார். நம்மைப் போன்றவர்கள் தந்த ஆதரவு அவருக்கு உற்சாகமும் நம்பிக்கையும் அளித்திருக்கிறது. தேர்ந்த எழுத்தாளன் என்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டு விட்டது. நமக்கு இன்னும் (தன்னையும், அவர் ஒத்த இரண்டு பிரபல எழுத்தாளர்களையும் குறிப்பிட்டு) அவர்களுக்கும் கிடைத்து வருகிற பாராட்டுக்கள், மரியாதைகள், புகழ் வெளிச்சங்களை எல்லாம் பார்த்து, இவரும் தனக்கும் இவை எல்லாம் கிடைக்கும், முழு நேர எழுத்தாளன் ஆகி விட்டால் என்று எண்ணி, வேலையை விட்டு விட்டு வந்து நிற்கிறார். நாம் உதவி பண்ண வேண்டும் என்று

எதிர்பார்க்கிறார். இவரை மாதிரி அநேகர் இப்படி நடந்து கொள்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் நாமும் மற்ற பிரபல எழுத்தாளர்களும் பெறுகிற மாலை மரியாதைகள், உபசாரங்கள், பாராட்டுக்கள், கவனிப்புகள் தான் தெரிகின்றன. நாம் பட்டிருக்கிற சிரமங்கள், இந்த நிலைக்கு நாம் வளர்வதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள், செய்த உழைப்புகள் எல்லாம் தெரிவதில்லை. நாமும் எழுத்தாளனாகி ஒரு பத்திரிகையில் சேர்ந்து விட்டால் நம்ம நிலையும் உயர்ந்து விடும் என்று தப்புக் கணக்கு போடுகிறார்கள். இருக்கிற வேலையை விட்டு விட்டு. சென்னைக்கு வந்து கஷ்டப்படுகிறார்கள். இவர்கள் அறியாமையைப் பற்றி என்ன சொல்ல!'

பத்திரிகை உலக யதார்த்த நிலையையும் எழுத்தாளர்களது மன நிலையையும் அவர் உள்ளது உள்ளபடி சொன்னார் என்றே கொள்ள வேண்டும்.



## 2

பத்திரிகைகள், புத்தகங்களைப் படிக்கிற வாசகர்களில் பலருக்கு, நாமும் இதுமாதிரி எல்லாம் எழுதலாமே என்ற எண்ணம் ஏற்படுகிறது; கதைகள் கவிதைகள் எழுத வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. அவர்களில் அநேகர் எழுத்து முயற்சிகளில் ஈடுபடுகிறார்கள்.

எழுத வேண்டும் என்ற எண்ணம் பெரும் பலருக்கு ஏற்பட்டாலும் கூட, எதை எழுதுவது, எப்படி எழுத

ஆரம்பிப்பது என்ற குழப்பம் அநேகரை தயங்கச் செய்கிறது. பலர் துணிந்து எழுத ஆரம்பிக்கிருர்கள். பத்திரிகைகளில் படிக்கிற கவிதைகளைப் போலவும், கதைகளைப் பின்பற்றியும் தங்களுக்குத் தோன்றியதை எழுதுகிருர்கள்.

சிலர் தாங்கள் எழுதியவற்றை தங்கள் நண்பர்களிடம் வாசித்துக் காட்டுகிருர்கள். சிலர், மற்றவர்கள் என்ன சொல்வார்களோ என்ற கூச்சத்துடன், யாரிடமும் காட்டாமலே வைத்துக் கொள்கிருர்கள். பலர் பத்திரிகைகளுக்கு அனுப்பு கிருர்கள். எப்பவாவது, ஏதாவது, அச்சில் வந்து விட்டால், அவர்கள் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிருர்கள். மேலும் உற்சாகத்துடன் எழுத்தில் ஈடுபடுகிருர்கள்.

இப்படி எழுதும் ஆர்வம் உடையவர்கள் சிலர் சேர்ந்து 'கையெழுத்துப் பத்திரிகை' நடத்துகிருர்கள்.

தமிழ் நாட்டில் கையெழுத்துப் பத்திரிகைகள் வெகு அதிகமாகவே இருக்கின்றன. சில நகரங்களில் இருபது, முப்பது என்று கூட இவை உருவாகின்றன. சில வட்டாரங்களில் கையெழுத்துப் பத்திரிகையாளர் சங்கம் கூட செயல்படுகிறது.

கையெழுத்துப் பத்திரிகைகளில் மிகப் பல — ஜனரஞ்சகமான – வணிக நோக்குப் பத்திரிகைகளின் போக்குகளையே பின்பற்றினுலும் கூட, இத்தகைய முயற்சிகள் இளைஞர்களுக்கு இருக்கிற எழுத்து ஆர்வத்தையும், உற்சாகத்தையும், உழைப்பு ஊக்கத்தையும் நன்கு புலப்படுத்துகிற வெளிப்பாடுகளாக விளங்குகின்றன.

அநேகம் முயற்சிகள் அமைப்பில், எழுத்தில், சித்திர வேலைகளில், வர்ண விஸ்தாரங்களில்

வெகு சிறப்பாகவும், வசீகரமாகவும் மிளிர்கின்றன. சில கதைகள் கட்டுரைகள் விஷயத்திலும் அதிக அக்கறை செலுத்துகின்றன. இந்த வித முயற்சிகளைப் பாராட்டத் தான் வேண்டும்.

இவை எல்லாம் இளைஞர்களின் ஆற்றலை, உழைப்பை, பொறுமையை மற்றும் எழுத்துக் கலையிலும் பத்திரிகைத் துறையிலும் அவர்களுக்கிருக்கிற ஆர்வத்தையும் வெளிப்படுத்துகின்றன.

கையெழுத்துப் பத்திரிகை சுய பயிற்சிக்கும் வளர்ச்சிக்கும் நல்ல தளமாக அமைய முடியும். திறமையை வளர்த்துக் கொள்வதற்கும், எழுதி எழுதி முன்னேற்றம் பெறுவதற்கும் உதவக் கூடிய பயிற்சிக் களமாக விளங்க வேண்டும் இந்த ரக முயற்சிகள். வளர்கிற எழுத்தாளன் எழுதுகிற எழுத்துக்களை சேமித்து வைக்கிற மலர்க் கூடை போல் கையெழுத்துப் பத்திரிகை இருக்கிறது என்று பெரிய எழுத்தாளர் ஒருவர் ஒரு சமயம் சொன்னார். அதுவும் பொருத்தமானதே.

கையெழுத்துப் பத்திரிகை நடத்துகிறவர்களில் அநேகர், காலப் போக்கில், தங்கள் சஞ்சிகையை அச்சுப் பத்திரிகையாகக் கொண்டு வர வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். தீவிரமாக முயல்கிறார்கள். சில சமயம் வெற்றியும் பெறுகிறார்கள்.

இந்தவித உந்துதல்களினாலும் சிறு பத்திரிகைகள் அதிகம் தோன்றுவது இயல்பாக இருக்கிறது. சிறு பத்திரிகை முயற்சிகளில் பெரும்பல வெறும் ஆர்வ வெளிப்பாடுகளாக இருக்கின்றனவே தவிர, உண்மையான எழுத்தாற்றலின், சிந்தனையின், மலர்ச்சியாகவோ, தரமான எழுத்துக்களின்

அளவைகளாகவோ அமைந்து காணப்படுவதில்லை. இது வருத்தத்துக்குரியது.

இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம்: எழுத வேண்டும், எழுத்தாளன் ஆக வேண்டும் என்ற ஆசையும் நினைப்பும் இருக்கிற அளவுக்கு – பத்திரிகை நடத்த வேண்டும் எனும் வேகம் செயல்படுகிற அளவுக்கு – அதற்காக தங்களைத் தாங்களே தகுதிப் படுத்திக் கொள்ள வேண்டும்; சிரமம் எடுத்து உழைத்தாக வேண்டும் என்ற உணர்வும் ஈடுபாடும் பெரும்பாலோருக்கு இல்லை.

எந்தத் துறையிலாயினும் சரியே, உண்மையான வளர்ச்சியும் முன்னேற்றமும் பெறுவதற்கு, அதில் ஈடுபடுகிறவர், இருக்கிற திறமையை வளர்த்துக் கொள்ள ஆவன செய்ய வேண்டியது அவசியமாகும். அதற்காக அவர் கடுமையாக உழைத்தாக வேண்டும். எழுத்துத் துறையும் இதற்கு விதி விலக்கு இல்லை.

எழுத்தாளர்களாக விரும்புகிறவர்கள் பத்திரிகைகளை மட்டும் படித்தால் போதாது. சமகால எழுத்தாளர்களில் புகழ் பெற்ற ஒரு சிலரின் எழுத்துக்களை மாத்திரம் படித்தால் போதாது. பரவலாக, நிறைய நிறையப் படிக்க வேண்டும்.

தற்காலத்தில் எழுதப்பட்டு வெளி வருகிற புத்தகங்களில் தரமானவை என்று ரசிகர்களால் கூறப்படுகிற அனைத்தையும் இளைய எழுத்தாளர்கள் படித்தறிவது நல்லது. அவற்றுடன் முந்திய தலைமுறை எழுத்தாளர்களில், சாதனை புரிந்திருப்பவர்கள் என்று பெயர் பெற்றிருப்பவர்களது படைப்புக்களையும் தேடிப் பிடித்துப் படிக்க முயல வேண்டும்.

புதிய தலைமுறை எழுத்தாளர்களில் சிலர், தமிழில் புதுமையாக, பிரமாதமாக, எதுவும் சாதிக்கப்படவில்லை ; நாம் தான் புதுமைப் படைப்புகளை ஆக்க வேண்டும் ; ஆக்குவோம் என்று பேசுவதும் எழுதுவதும் இயல்பாக இருக்கிறது.

இது சரியான, நேரிய, கண்ணோட்டம் ஆகாது. தமிழில் இதற்கு முன் செய்யப்பட்டிருப்பனவற்றை இவர்கள் அறிந்து கொள்வது நல்லது. அப்படித் தெரிந்து கொண்டால் தான், மேலும் புதுமையாக, புதிய தமிழ் வளர்ச்சிக்கு வளம் ஊட்டும் விதத்தில், என்ன செய்ய முடியும்— என்னென்ன செய்ய வேண்டும் – என இவர்கள் புரிந்து கொள்ளுதல் கூடும்,

இரண்டாயிரம் வருட வரலாற்றுப் பெருமை உடையது தமிழ் இலக்கியம் என்று கூறப்படுகிறது. புதிதாக எழுத விரும்புகிறவர்கள், அந்த இலக்கியப் பெருமை தான் என்ன என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். நல்ல முறையில் வளரக் கூடிய இன்றைய எழுத்தாளர்களுக்கு பழந்தமிழ் இலக்கிய அறிமுகமும் தேவை தான்.

தற்காலத்தில், படிக்க விரும்புகிற ரசிகர்களுக்கு வசதியாக நூல் நிலையங்கள் இருக்கின்றன. கூடுமானவரை பல தரப்பட்ட புத்தகங்களும் நூலகங்களில் கிடைக்கத் தான் செய்கின்றன.

வளர்ச்சி பெறுவதில் நாட்டமுடைய எழுத்தாளர்கள் தமிழ் மொழி இலக்கிய வளர்ச்சியைப் புரிந்து கொள்ள முயல்வதுடன், இதர இந்திய மொழிகளின் இலக்கியப் படைப்புகளை அறிமுகம் செய்து கொள்வதும் நல்லது.

இதற்கு உதவக் கூடிய வகையில் மொழி பெயர்ப்பு நூல்கள் மிகுதியாகவே வந்துள்ளன. நேஷனல் புக் ட்ரஸ்ட், சாகித்திய அகாதமி ஆகிய நிறுவனங்கள் இவ்வகையில் பாராட்டுதலுக்குரிய பணிகளைப் புரிந்திருக்கின்றன. இதர இந்திய மொழிகளின் நல்ல நாவல்கள், சிறுகதை தொகுப்புகள், இலக்கிய வரலாறுகள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வந்துள்ளன.

ஆங்கிலம் கற்றவர்கள் உலக இலக்கியச் செல்வங்களை ஆங்கில மொழி பெயர்ப்பாகப் படித்தறியலாம். ஆங்கிலம் தெரியாதவர்கள் கூட, படித்துப் பயனடையத் தகுந்த விதத்தில், உலக இலக்கியங்கள் ஓரளவுக்குத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

மொழி பெயர்ப்பு நூல்களைப் படித்தே தங்களது இலக்கிய ஞானத்தையும் எழுத்தாற்றலையும் வளம் செய்து கொண்டு பெயர் பெற்றுள்ள சாதனையாளர்கள் தமிழ் எழுத்தாளர்களிடையிலும் இருக்கிறார்கள்.

விஷயங்களை விசால நோக்குடன் தெரிந்து கொள்ள வேண்டும் ; நம்மை நாமே வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற உள் உந்துதல் அவசியம். அத்துடன் முயற்சி எடுத்து உழைக்கவும் வேண்டும். அப்பொழுது தான் அறிவும் திறமையும் தகுதியும் வளர்ச்சி பெற முடியும்.

எழுத்துத் துறையில் வளர்ந்து சாதனைகள் புரிய ஆசைப்படுகிறவர்கள் மேலும் மேலும் படித்துக் கொண்டே இருக்க வேண்டும். தமிழ் எழுத்தாளர்களில் பல பேர் தாங்கள் எழுதுகிறவற்றைத் தவிர, இதர எழுத்தாளர்களின் எழுத்துக்களைப் படிப்பது கிடையாது என்று சொல்லிக் கொள்வதில் பெருமை அடைவது உண்டு.

இது தவருன நோக்கு. தன்னுடைய எழுத்துக்களை மற்ற எல்லோரும் படிக்க வேண்டும் – படித்துப் பாராட்ட வேண்டும் - என்று எழுத்தாளர்கள் எண்ணுகிறார்கள். அதே எண்ணத்தை மற்றவர்கள் விஷயத்தில் இவர்களும் செயல்படுத்திஞல் என்ன கெட்டு விடும்?

பிறருடைய எழுத்துக்களையும், பரவலாக நிறையப் புத்தகங்களையும் படிப்பதஞல் தங்களுடைய சுய சிந்தனை பாதிக்கப்படும் ; பிறரது எழுத்துக்கள் தங்கள் உள்ளத்தில் பதிவுகளையும் பாதிப்புகளையும் உண்டாக்குவதன் மூலம் தங்களுடைய எழுத்தும் இயல்பாகவே பாதிக்கப்படும் என்று சிலர் அஞ்சுகிருர்கள். வெளிப்படையாகவும் சொல்கிருர்கள்.

இதுவும் தவருன கருத்தே ஆகும். சோம்பேறி இயல்பும், தன்னம்பிக்கைக் குறைவும் பெற்றிருப்பவர்கள் தான் இப்படிச் சொல்வார்கள். படிப்பு சிந்தனைத் திறனை கூர்மைப்படுத்தும் ; அனுபவ அறிவு அதிகரிக்கத் துணை புரியும். சுயமான திறமையும் தெளிவான சிந்தனை ஆற்றலும் உடையவர்கள் பிறரது கருத்துக்களால், நூல்களால், பாதிக்கப் பெற்று சலனம் அடைவோம் என்று பயப்படவே மாட்டார்கள். பயப்பட வேண்டிய அவசியமும் கிடையாது.

பெரிய பெரிய அறிவாளிகள், சிந்தனையாளர்கள், சாதனைகள் மிகப் புரிந்தவர்கள் தங்கள் ஆயுள் முழுவதும், ஒரு மாணவனின் ஆர்வத்தோடும் உற்சாகத்தோடும், படித்துக் கொண்டே இருந்தார்கள். இது வரலாற்று உண்மை.

உலக இலக்கிய மேதையாக விளங்கிய பெர்னுட்ஷா, படைப்பு இலக்கியத்தில் இது வரை வேறு எவரும் தொட இயலாத அளவில் பல சிகர சிருஷ்டிகளை உருவாக்கியுள்ள லியோ டால்ஸ்டாய் மற்றும் அரசியல் தலைவர்களான லெனின், நேருஜீ போன்றவர்கள் படிப்பதில் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தார்கள் என்பதை அவர்களுடைய வரலாறுகள் கூறும்.

படிப்பதில் காட்டுகிற அக்கறையையும், உற்சாகத்தையும் உழைப்பையும், எழுதுவதிலும் காட்ட வேண்டும். தினசரி ஏதாவது எழுத வேண்டும்.

சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்' என்பது போல, எழுத்துத் தேர்ச்சியும் எழுதி எழுதி பழகிப் பெறக் கூடிய ஒன்று ஆகும். பெயர் பெற்றுள்ள எழுத்தாளர்கள் சிலர், ஒவ்வொரு நாளும் இத்தனை பக்கங்கள் எழுத வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டு, அதை விடாது கையாண்டு வெற்றி கண்டிருக்கிருர்கள்.

தேர்ச்சியும், அனுபவ முதிர்ச்சியும், பெயரும் பெற்று விட்ட பிறகும் கூட — முதுமைப் பருவத்திலும் இப்பழக்கத்தை விடாது, தினசரி இத்தனை பக்கங்கள் எழுதியே தீர்வது என்று கொள்கைப் பிடிப்புடன் எழுதி வருகிற எழுத்தாளர்களும் இருக்கிருர்கள்.

எதுவும் உழைப்பு இல்லாமல் எளிதில், சுலப வெற்றியாக, சித்தித்து விடாது.

எழுத்துத் துறையில் முன்னேறி சாதனைகள் புரிய ஆசைப்படுகிறவர்கள், யாரையும் பின்பற்ருமல், தனக்கெனத் தனி வழி மேற்கொள்ள வேண்டும். பெயரும் புகழும்

பெற்று விட்ட அவரைப் போல் எழுதுகிறேன் — இவர் பாதிப்பினுல் எழுதுகிறேன்; இவருடைய எழுத்து மாதிரியே எனதுஎழுத்தும் இருக்கிறது என்று சொல்லிக் கொள்வது பெருமைக்குரிய விஷயம் அல்ல.

குறிப்பிட்ட ஒரு படைப்பாளியின் தாக்கத்திஞல் எழுத முற்படுகிற போது, அவருடைய எழுத்தின் பாதிப்புகள் — சாயல்கள் — புதிதாக எழுதுகிறவரின் எழுத்துக்களில் இடம் பெறத் தான் செய்யும். ஆனல் அந்த தாக்கத்தை மீறி, முன்னேறி, சுய வளர்ச்சி காட்டுவதில் தான் புதிய படைப்பாளியின் வெற்றி பிரகாசிக்க முடியும். சுய விமர்சனம் செய்து கொள்வதன் மூலம், எவரும் தனது எழுத்துக்களில் உள்ள குறைபாடுகளை உணர்ந்து திருத்திக் கொள்ள இயலும்.

ஒவ்வொரு எழுத்தாளரும் எழுத்தில் தனித் தன்மை பெற முயல வேண்டும்.

எழுத வேண்டும் என்கிற உணர்வு ஏன் ஏற்படுகிறது? தன்னை, தனது அனுபவங்களை, அனுபவங்கள் தன் உள்ளத்தில் எழுப்பிய பதிவுகளை வெளிப்படுத்த வேண்டும் — மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும் — என்ற உந்துதலினுல்.

தனது உள்ளத்தின் உணர்வுகளை, கிளர்ச்சிகளை, எழுச்சிகளை சலனங்களை வெளிப்படுத்த வேண்டும் என்ற துடிப்பு மனிதருக்கு இயல்பாகவே உள்ளது.

சிறு குழந்தைகளின் செயல்களைக் கவனித்தால் கூட இது புலனுகும். பெரியவர்கள் – ஆண்கள், பெண்கள் – பேச்சினுல் இத்துடிப்பைத் தணித்துக் கொள்கிருர்கள். எழுதும் ஆற்றல் பெற்றிருப்பவர்கள் எழுத்தின் மூலம் இதை

வெளிப்படுத்துகிறார்கள். தங்களுக்கு இலகுவில் கைவரக் கூடிய எழுத்து வடிவம் மூலம்— சிறுகதை, கட்டுரை, கவிதை, நாடகம், நாவல் என்ற எந்த விதத்திலாவது – தங்கள் உணர்வுகளை, அனுபவ பாதிப்புகளை வெளியிடுகிறார்கள்.

இவை சாதாரண ரீதியில் செய்யப்படுகிறபோது வெறும் எழுத்து ஆக இருக்கின்றன. பத்திரிகைகளில் பெரும்பாலும் தென்படுகிற பொழுது போக்குக் கதைகளாகவும் சாரமற்ற எழுத்துக்களாகவும் அமைகின்றன.

பேச்சிலே கூட, ஒரே அனுபவத்தை, அல்லது ஒரே விஷயத்தை, ஒவ்வொருவர் எடுத்துச் சொல்வது வெவ்வேறு விதமாக அமையும். அவரவர் பார்வை, சொல்கிற தினுசு, கொடுக்கிற அழுத்தம் கொள்கிற அர்த்தம், கூட்டியும் குறைத்தும் - விட்டும் சேர்த்தும் கலக்கிற வேலைத்தனங்கள் இப்படிப் பலவற்றாலும் தனிச் சுவையும் தனித் தன்மையும் ஏற்பட்டு விடுகின்றன.

எழுத்தும் இப்படிப்பட்ட வேலைகளைப் பொறுத்து தனித் தன்மையும் தனி நயமும் தனி அழகும் பெறும்.

ஆகவே, எழுத்தில் தனித் தன்மை என்பது – ஒவ்வொருவர் எழுத்துக்கும் தனியானதொரு தன்மை சேர்வது-அவரவர் பார்வை, மனப் பண்பு, வாழ்க்கை மீதான சிந்தனை, அழகு உணர்வு, கற்பனைத் திறன், அனுபவத் தேர்ச்சி போன்ற பலவற்றாலும் நிகழ்வது ஆகும்.

இந்த அடிப்படை மீது தனி மிடுக்குடன் எழுகிற எழுத்துக்கள் ஆழம், கனம், உண்மையின் அழுத்தம் முதலியன பெற்று, வாசகனின் உள்ளத்தில் விசேஷமான பாதிப்பை உண்டாக்கக் கூடியதாக இருக்கும்.

பத்திரிகைத் தரமான வெறும் எழுத்துக்கள், ஒரு தரம் படித்து விட்டு மறந்து விடக் கூடிய விதத்திலேயே இருக்கும்.

அழுத்தமும் ஆழமும் கனமும் உள் ஒளியும் பெற்றுள்ள படைப்புக்கள் வாழ்க்கையை – அதன் பல்வேறு தன்மைகளை – நன்கு புரிந்து கொள்ளத் துணை புரியக் கூடிய எழுத்துக்களாக விளங்கும். திரும்பத் திரும்ப படிக்கத் தூண்டும் சக்தியை அவை பெற்றிருக்கும்.

இந்த விதமான ஆழ்ந்த, அனுபவ ஞான, எழுத்துக்களை எழுதும் ஆற்றலைப் பயின்று தேர்வதே எழுத்தாளர்களின் நோக்கமாக அமைதல் வேண்டும்.

இதற்கு புத்தகங்கள் படிப்பது மட்டும் போதாது. கவிஞர் சொன்னது போல, 'விசாலப் பார்வையால் விழுங்கு உலகை, மக்களே!' என்ற போக்கும் வேண்டும். வாழ்க்கையை, மனிதர்களை, சமூகத்தை நன்கு கவனித்து உண்மைகளை உணர வேண்டும். மனித நேயத்துடன் அவர்களை, அவர்களது பிரச்சனைகளை அணுக வேண்டும்.



# 3

எழுத்தாளர்கள் எதற்காக எழுதுகிறார்கள்?

இது ஒரு முக்கியமான கேள்வி. சுவாரஸ்யமான பதில்களைப் பெற்றுத் தரக்கூடிய கேள்வியும் கூட. இதற்கு எழுத்தாளர்கள் சொல்கிற பதில்கள் விதம் விதமாக

இருக்கும். எத்தனை எழுத்தாளர்கள் இருக்கிருர்களோ அத்தனை விதமான, ரசமான பதில்கள் கிடைக்கும் என்று கூடச் சொல்லலாம்.

திடீரென்று எழுத்தாளர்களிடையே 'நீங்கள் எதற்காக எழுதுகிறீர்கள்?' என்று கேட்டால், அவர்களில் பல பேர் திகைப்படையவே செய்வார்கள். தாங்கள் எதற்காக எழுதுகிருர்கள் என்று எண்ணிக்கூடப் பார்த்திராத எழுத்தாளர்கள் நிறையப் பேர் உண்டு என்பதும் தெளிவாகும்.

ஒரு சமயம் சென்னையில் இப்படி ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. 'நான் எதற்காக எழுதுகிறேன்?' என்று சிந்தித்துப் பதில் கூறும்படி, பதிஞேரு பிரபல எழுத்தாளர்கள்— இலக்கியப் படைப்பாளிகள் கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்.

பதினோரு பேரும் கட்டுரைகள் வாசித்தார்கள். ரசமான, சிந்தனை நிறைந்த கட்டுரைகள். அவற்றை பின்னர் 'எழுத்து பிரசுரம்' தொகுத்து, புத்தகமாக வெளியிட்டது. நல்ல புத்தகம். இளைய எழுத்தாளர்களுக்கு மிகுதியும் உதவக் கூடிய கருத்துக்களைக் கொண்டது.

அப்பதினோரு பேர்களிலேயே அநேகர், அதற்கு முன்பு, நாம் ஏன் எழுதுகிறோம் என்று எண்ணிப் பார்த்தது இல்லை என்று ஒப்புக் கொண்டிருந்தார்கள். எதற்காக எழுதுகிறோம் என்று சுய் விமர்சன ரீதியில் சிந்தனை வளர்த்திருந்தார்கள்.

இப்பொழுதும் எழுத்தாளர்களிடம் அப்படி ஒரு கேள்வியைக் கேட்டு, விளக்கமான பதில்களைப் பெற்று, அவற்றை தொகுத்தால் அவை படிப்போருக்கு நல்ல விருந்தாகவே அமையும்.

நாங்கள் எழுத்தாளர்கள், எழுதுவது எங்கள் இயல்பு என்று பலரும் சொல்வார்கள். எங்களால் எழுதாமல் இருக்க முடியாது; அதனால் தான் எழுதுகிறோம் என்பார்கள்.

மலர்கள் பூப்பது போல, குயில்கள் பாடுவது போல, மேகங்கள் மழை பொழிவது போல நாமும் எழுதுகிறோம். மலர் ஏன் மலர்கிறது என்று மலர்களைக் கேட்கலாமா? குயில் ஏன் கூவுகிறது என்று குயிலைக் கேட்க முடியுமா?. அவற்றின் இயல்பு அது. அதேமாதிரி தான் கவிஞர்களும், படைப்பாளிகளும் என்று சிலர் சொல்வார்கள்.

வாழ்க்கையில் எனது தேடல்களை – உண்மையின் தேடல்களை – அறிவிப்பதற்காக எழுதுகிறேன்; என்னை நானே வெளிப்படுத்திக் கொள்வதற்காக எழுதுகிறேன்; என் அனுபவங்களைப் பிறருக்குப் புரிய வைப்பதற்காக எழுதுகிறேன்; என்னை நானே புரிந்து கொள்வதற்காக எழுதுகிறேன். என்னையும், உலகத்தையும், மனிதர்களையும் நான் புரிந்து கொண்ட விதத்தை - வாழ்க்கை உண்மைகளை நான் அறிந்து கொண்டபடி, – என் மனப் பதிவுகளை எடுத்துச் சொல்வதற்காக எழுதுகிறேன். மனித நாடகங்களைப் பார்த்துச் சிரிப்பதற்காக எழுதுகிறேன்; அவற்றைப் படித்து மற்றவர்களும் சிரிக்க வேண்டும் என்பதற்காக எழுதுகிறேன் - இந்த விதமாக பலப்பல பேசுவார்கள்.

கொள்கைக்காக எழுதுகிறேன் என்றும், லட்சியத்துக் காக எழுதுகிறேன் என்றும் சும்மா ஏனோ எழுதிக் கொண்டிருக்கிறேன் என்றும் நான் உயிரோடிருப்பதை உணர்த்துவதற்காக எழுதுகிறேன் என்றும், விதம் விதமாக சொல்லக் கூடியவர்கள் அநேகர்.

பணத்துக்காக எழுதுகிறேன், புகழுக்காக எழுதுகிறேன், என் மன அரிப்பை தீர்த்துக் கொள்வதற்காக எழுதுகிறேன் என்று சொல்கிற எழுத்தாளர்களும் இருப்பார்கள்.

படிப்பவர்களுக்குக் கிளுகிளுப்பூட்டுவதற்காக எழுதுகிறேன், பிறருக்குக் கோபம் உண்டாக்குவதற்காக எழுதுகிறேன், பிறருக்கு வழிகாட்ட எழுதுகிறேன், சமூகம் சீர்திருந்த வேண்டும் என்பதற்காக எழுதுகிறேன், மக்களுக்கு சிந்தனை விழிப்பு ஏற்படுத்துவதற்காக எழுதுகிறேன் - இப்படியும் சொல்வார்கள் பற்பலர்.

பொதுவாக அவரவர் இயல்புகளின்படி, அவரவர் நோக்கிற்கும் போக்கிற்கும் ஏற்ப, எழுத்தும் வித்தியாசப்படும்.

என்றாலும், எழுத்து வகைகளில் பளீரெனப் புலனாகக் கூடிய போக்குகள் இரண்டு உண்டு.

ஒன்று – தனிமனித நோக்கு. அது அகவயமான போக்கைக் கொண்டிருக்கும். தனி நபரின் உள்ளத்து உணர்ச்சிகள், ஆசைகள், கனவுகள், ஏக்கங்கள், விரக்தி வேதனை, அகஉளைச்சல்கள், வக்கிரத் தன்மைகள் முதலிய வற்றை சித்திரிப்பது.

இரண்டாவது – சமுதாயப் பார்வை. (சமூக நோக்கு) பரந்த நோக்கில் சமூக பிரச்னைகளை எடுத்துச் சொல்வது. ஏழை எளியவர்கள், வாழ்க்கை வசதிகள் வஞ்சிக்கப்பட்டவர்கள், அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருப்ப வர்கள், வாழ்வின் அடி மட்டத்தில் அவதிப்படுவோர் முதலிய வர்களின் வாழ்க்கை நிலைக்கான உண்மைக் காரணங்களை அவர்களுடைய பிரச்னைகளை, எழுச்சிகளை, போராட்டங்களை

எல்லாம் சித்திரிப்பது. வர்க்கக் கண்ணோட்டத்துடன் வாழ்க்கையின், சமூகத்தின், சிக்கல்களை விளக்குவது. வாழ்க்கையின் சவால்களை எதிர் கொள்வதற்கு, மக்கள் விழிப்புற்று – சிந்தித்துச் செயலூக்கம் பெறுவதற்கு நம்பிக்கை ஒளி காட்டுவது . . .

எந்த முறையில் எழுதினாலும், மனிதாபிமானத்துடன் எழுத வேண்டும். மனித உள்ளத்தை மேனிலைப்படுத்தக் கூடியதாக எழுத்து அமைதல் நல்லது. படிப்பவர்களின் எண்ணத்தை உயர்த்துவதாக, வாழ்க்கை நலம் பெற ஏற்றதாக இருக்க வேண்டும்.

'நாட்டு மக்கள் நலமுற்று வாழவும், நானிலத்தோர் மேனிலை எய்தவும்' தனது கவிதை பயன்பட வேண்டும் என்று விரும்பினார் மகாகவி பாரதியார்.

எழுத்துலகத்தின் பொதுவான குறிக்கோள் இதுவாக அமைந்திருப்பது நல்லது. ஆனால், தற்காலப் பத்திரிகைகள் இந்த நோக்கை ஆதரிக்கவில்லை.

இன்றையப் பத்திரிகைகள் பண்பாட்டுச் சிதைவுக்கும் சீரழிவுக்குமே வகை செய்கின்றன. மக்கள் கலாசாரத்தை மண்ணாக்கும் விதத்திலேயே கதைகள் கட்டுரைகள் கவிதைகள் நாவல்கள் சித்திரங்களை எல்லாம் வெளியிடுகின்றன.

இன்றையப் பத்திரிகைகள் வணிக நோக்கில் செயல்பட்டு, மக்கள் மத்தியில் சீரழிவுப் போக்குகளை வேகமாகப் பரப்புகின்றன.

புகழுக்கும் பணத்துக்கும் ஆசைப்படுகிற எழுத்தாளர்கள்

பத்திரிகைகளின் நச்சுத் தன்மைகளை வளர்ப்பதில் கருத்தாக இருக்கிறார்கள்.

எழுத்து மனிதனை மனிதனாக வாழ வகை செய்ய வேண்டும். மனிதகுல மாண்புகள் போற்றிப் பாதுகாக்கப் படுவதற்குத் துணை புரிய வேண்டும். மனிதர்களும் சமூகமும் மேம்பாடு அடைய உதவ வேண்டும். மனித வாழ்க்கை அன்பும் அமைதியும் ஆனந்தமும் நிறைந்ததாக அமைவதற்கு எழுத்தாளர்களின் படைப்புக்கள் தம் பங்கை ஆற்ற வேண்டும்.

எழுத்தாளனும் சமூக மனிதன் தான். அவனுக்கும் சமூகப் பொறுப்பும் கடமைகளும் உண்டு. சமூகத்தைக் கெடுத்து நாசமாக்கும் விதத்தில் எழுத்தாளனின் திறமை செயல்படுவது சமூகக் குற்றமேயாகும். இந்த உணர்வு எழுத்தாளர்களுக்கு வேண்டும்.

## 4

எழுத்து உலகில் முன்னேற விரும்புகிறவர்களுக்கும், எழுத்தில் புதுமை படைக்கத் துடிக்கிற திறமைசாலிகளுக்கும், ஆழ்ந்த - கனமான – சிந்தனைக்கு வேலை கொடுக்கிற எழுத்து முயற்சிகளில் ஈடுபடுவோருக்கும் தற்காலப் பத்திரிகைத் துறை உற்சாகம் தருவதாயில்லை. அதுசரி; புத்தக வெளியீட்டுத் துறை இவர்களுக்கு நம்பிக்கையும் ஆதரவும் தரக்கூடிய தன்மையில் இருக்கிறதா?

இக்கேள்வி பலராலும் கேட்கப்படுகிறது. இன்றையப் புத்தகப் பிரசுரத் தொழிலின் நிலை என்ன என்று அறிந்து கொள்ள ஆசைப்படுகிறவர்கள் நாடு நெடுகிலும் காணப்படுகிறார்கள்.

புத்தகப் பிரசுரமும், பணத்தை ஈடுபடுத்தி லாபம் பெறுகிற நோக்கத்துடன் நடத்தப்படுகிற ஒரு தொழிலாகத் தான் மதிக்கப்படுகிறது. ஆகவே. பத்திரிகைகளின் போக்கையே பிரசுரகர்த்தர்களும் பின்பற்றுகிறார்கள்.

ஜனரஞ்சகமான, அதிக விற்பனை உள்ள, வாரப் பத்திரிகைகளில் எழுதி புகழ் பெற்று விடுகிற எழுத்தாளர்களின் எழுத்துக்கள் உடனடியாகப் புத்தகங்களாக வந்து விடக்கூடிய நிலைமை 'தமிழ் நாட்டில் இருக்கிறது.

இதில், தமிழ் வாசகர்களின் ருசியையும் இயல்பையும் எண்ணி வியக்க வேண்டிய உண்மைகள் சில எடுத்துக் காட்டப்பட வேண்டும்.

பல லட்சம் பிரதிகள் விற்பனையாகிற ஒரு வாரப் பத்திரிகையில் ஒரு தொடர்கதை வெளி வருகிறது. அந்தக் கதையை லட்சக் கணக்கான பேர் படித்து முடித்திருப்பார்கள். அத் தொடர்கதை முடிந்த உடனேயே - சூட்டோடு சூடாக— அது புத்தகமாக்கப்பட்டு விற்பனைக்கு வருகிறது.

சில பிரபல எழுத்தாளர்களின் கதைகள் பத்திரிகையில் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிற காலத்திலேயே, புத்தகமாகத் தயாராவதற்கான அச்சு வேலையும் நடைபெறுகிறது. பத்திரிகையில் கதை நிறைவுற்ற சில நாட்களிலேயே அது புத்தகமாக வந்து விடுகிறது. சில 'ஸ்டார் எழுத்தாளர்கள்' விஷயத்தில் புத்தக வெளியீட்டாளர்கள் வெகு வேகமாகத்தான் செயல்படுகிறார்கள்.

அந்தப் புத்தகத்தின் விலை அதிகமாகத் தான் அமைகிறது. அப்படியும், அதை வாங்கிப் படித்து மகிழக் கூடிய ரசிகர்கள் இருக்கத் தான் செய்கிறார்கள்.

சில தொடர்கதைகள், இரண்டு மூன்று பாகங்களாகப் புத்தக வடிவம் பெறுகின்றன. பத்திரிகையில் படித்து மகிழ்ந்த கதையை, அதிக விலை கொடுத்து, புத்தகமாக வாங்கிப் படிக்கவும் வாசகர்கள் தயாராக இருக்கிறார்கள். அதனால் தானே பதிப்பகத்தார்கள் ஆர்வத்தோடு அவற்றை அவசரம் அவசரமாக புத்தகங்களாக்கி வெளியிடுகிறார்கள் ?

அதே வேளையில், புதுமையாகவும் தரமானதாகவும், ஆழ்ந்த வாழ்க்கை உண்மைகளை எடுத்துக் கூறி சிந்திக்க வைக்கும் இலக்கிய முயற்சிகளாகவும் எழுதப்படுகிற எழுத்துக்கள் — பத்திரிகைகளில் அச்சாகி வந்திருந்த போதிலும் — பிரசுரகர்த்தர்களால் விரும்பி ஏற்கப் படுவதில்லை.

அப்படியே, நட்புக்காக — ஆளுக்காக - பிரசுரித்து வைக்கலாமே என்ற தயவுடன் அவற்றில் சிலவற்றை, புத்தக வெளியீட்டாளர்கள் ஏற்றுக் கொள்ளலாம். அவர்கள் ஏற்றுக் கொண்ட போதிலும், அவை உடனடியாக புத்தகமாக வெளி வந்து விடும் எனும் உறுதி எதுவும் இல்லை.

அநேக எழுத்தாளர்களின் எழுத்துக்கள்-பத்திரிகைகளில் வந்த அச்சுப் பிரதிகளாகவோ, அச்சு வடிவம் பெறாத கையெழுத்துப் பிரதியாகவோ - பதிப்பகத்தாரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகும், புத்தக வடிவம் பெறுவதற்கு மூன்று அல்லது நான்கு வருடங்கள் கூட எடுத்துக் கொள்கின்றன

'இதெல்லாம் விலை போகாது ஐயா. இவற்றை நாங்கள் பிரசுரிக்க விரும்பவில்லை' என்று சொல்லி, நாவல் அல்லது சிறுகதைத் தொகுப்பு அல்லது கட்டுரைகளை பிரசுரகர்த்தார் திருப்பித் தரவும் மாட்டார். 'வெளியிடுவோம்.. புத்தகமாகக் கொண்டு வந்து விடுவோம்' என்று காலத்தை ஏலத்தில் விட்டுக் கொண்டே இருப்பார். மூன்று நான்கு வருடங்களுக்குப் பிறகு அதை அவரே புத்தகமாக வெளியிடவும் செய்வார்.

அதுவரை எழுத்தாளர்கள் பொறுமையோடு காத்திருக்க வேண்டியது தான்.

சிலர் பொறுமையிழந்து, சண்டை போட்டு, தங்கள் எழுத்துக்களை திருப்பி வாங்கிக் கொள்வதும் உண்டு. அப்படி வாங்கிச் செல்லப்படுகிற எழுத்துக்கள் வெளிச்சத்தைக் காண வாய்ப்பு பெருமலே போகிறது! பிரசுரகரிடம் விட்டு வைத்திருந்தாலாவது, அவர் என்ருவது ஒரு நாள் புத்தகமாகக் கொண்டு வந்து விடுவார். எழுத்தாளருக்கு, தனது எழுத்துக்கள் புத்தகமாக வந்து விட்ட திருப்தியாவது கிட்டும். பணம் ஏதாவது கிடைக்குமா என்பது வேறு விஷயம்!

புத்தக வெளியீட்டாளர்கள் ஏன் இவ்விதம் தயங்குகிருர்கள்? இப்படிப்பட்ட புத்தகங்கள் விற்பனை யாவதில்லை என்று அவர்கள் சொல்கிருர்கள்.

பொதுவாக, தமிழ்நாட்டில், நல்ல புத்தகம் ஒன்று — அல்லது, விளம்பரப் புகழ் பெற்றிறாத எந்த எழுத்தாளருடைய புத்தகமும் — ஆயிரம் பிரதிகள் விற்பனையாவதற்கு நான்கு வருடங்கள் ஆகின்றன. இது பிரசுரகர்த்தர்களின் அனுபவம்.

அதனுலேயே அவர்கள் சீக்கிரம் விற்பனையாகிவிடக் கூடிய புத்தகங்களை வெளியிடுவதில் கருத்தாக இருக்கிருர்கள்.

தங்களைத் தாங்களே செம்மைப்படுத்திக் கொண்டு வாழ்க்கையில் முன்னேறுவதற்கான யோசனைகளைக் கூறும் புத்தகங்கள் (ஸெல்ப் இம்ப்ருவ்மெண்ட் புக்ஸ்), நாட்டு வைத்திய முறைகள், சமையல் கலை நூல்கள், சோதிடவகைப் புத்தகங்கள், ஆன்மீக நூல்கள் (மதம், கடவுள், ஆத்ம தத்துவம் போன்ற விஷயங்களை மேலோட்டமாக, எளிய முறையில் எடுத்துச் சொல்பவை) — இவை தான் அதிகம் விற்கின்றன. அடுத்தபடியாக, விளம்பரப் புகழ் பெற்ற ஒரு சில எழுத்தாளர்களின் நாவல்களும் சிறுகதைகளும் சில கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளும் வாசகர்களால் விரும்பி வாங்கப்படுகின்றன.

புத்தக வெளியீட்டாளர்கள், விற்பனையாளர்கள், புத்தகக் கண்காட்சி நடத்துகிறவர்களது அனுபவங்கள் மூலம் தெரிய வருகிற நடப்பு உண்மைகள் இவை.

நூலகங்களை நம்பித்தான் தமிழ் நாட்டில் புத்தக பிரசுர முயற்சிகள் வாழ்கின்றன. தனி நபர்கள் சொந்த உபயோகத்துக்கென்று புத்தகங்கள் வாங்குவது மிகவும் குறைவு.

கடந்த காலத்தை விட இது வெகுவாகக் குறைந்து விட்டது என்று கூட சொல்லப்படுகிறது. 1940கள் 50 களில் தனி நபர்களிடையே, புத்தகங்கள் வாங்கி வாசிக்கிற பழக்கம் அதிகம் இருந்தது.

வை. கோவிந்தன் என்ருெரு பிரசுரகர்த்தார். பத்திரிகைத் துறையிலும், புத்தக வெளியீட்டிலும், பலருக்கு

முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கி சாதனைகள் புரிந்தவர்.

'சக்தி' என்ெருரு தரமான மாத இதழை – 'டைஜஸ்ட்' பாணியில் – வெகுகாலம் நடத்தினுர் வை.கோ. 'அணில்' என்ற குழந்தைகள் பத்திரிகையை நடத்தி வழிகாட்டினுர். பிறகு தொகுப்பு 'மலர்'கள் வெளியிட்டார். 'சக்தி பிரசுராலயம்' என்ற பெயரில் புத்தக வெளியீட்டில் அரும் பெரும் காரியங்கள் செய்தார்.

நல்ல புத்தகங்களை, 'பெங்குவின் புக்ஸ்' மாதிரி, குறைந்த விலையில் வழங்க வேண்டும் என்று திட்டமிட்டுச் செயலாற்றியவர் வை.கோ. சிந்தனை நூல்கள், அறிவு வளர்ச்சிக்கு வகை செய்யும் புத்தகங்கள் முதலியவற்றை உயர்ந்த பதிப்புகளாக அவர் வெளியிட்டார். பாரதி பாடல்கள், திருக்குறள் (மூலமும் உரையும்) பிரதாபமுதலியார் சரித்திரம்+ சுகுணசுந்தரி, கம்பராமாயணம்: சுந்தரகாண்டம் ஆகியவற்றை ஒரு ரூபாய் விலையில், மலிவுப் பதிப்புகளாகத் தயாரித்து, வெளியிட்டார். அதன் மூலம் இதர பிரசுரகர்களும் மலிவு விலை நூல்கள் வெளியிடுவதற்கு வழி வகுத்துக் கொடுத்தார்.

அப்போதெல்லாம் மொத்தமாக நூலக ஆர்டர்கள் புத்தக வெளியீட்டாளர்களுக்குக் கிடைத்தது இல்லை. தனி நபர்கள் கணிசமான அளவில் புத்தகங்கள் வாங்கியதாகவே தோன்றியது. இது குறித்து வை. கோவிந்தன் அடிக்கடி சொல்வார்:

— 'ஹிந்து' பத்திரிகையில் 'புக்ஸ் ரிஸீவ்ட், என்று ஒரு பகுதி வருகிறது அல்லவா? அதில் புதிய புத்தகங்களின் பெயர் இடம் பெற்றாலே போதும், அந்தப் பத்திரிகை

அப் புத்தகங்களுக்கு மதிப்புரை எழுத வேண்டும் என்கிற அவசியம் கூட இல்லை. புக்ஸ் 'ரிஸீவ்ட் கால'த்தைப் பார்த்து விட்டே, புத்தகங்கள் தேவை என்று ஏகப்பட்ட ஆர்டர்கள் வரும்.

இப்போது அந்த அளவுக்கு 'ஆர்டர்கள், வருவதாக எவரும் சொல்வதில்லை. 'குமுதம்' இதழில் 'பு(து)த்தகம்' என்ற தலைப்பில் வருகிற பட்டியலை பார்த்து விட்டு கடிதம் எழுதுகிறவர்கள் அதிகம் என்று சில வெளியீட்டாளர்கள் சொல்கிறார்கள்.

1940 கள் 50 களில்— இரண்டாவது உலக மகாயுத்த காலத்திலும் அதற்குப் பின்னரும் — ஜனங்களிடம் பணப் புழக்கம் அதிகம் இருந்தது ; புத்தகங்கள் வாங்கும் ஆர்வமும் இருந்தது என்று பொதுவாகச் சொல்லப்படுவது உண்டு.

இக் காலத்தில் பணப்புழக்கம் குறைந்தா இருக்கிறது ? பஸ்களிலும், சினிமா தியேட்டர்களிலும், ஓட்டல்களிலும் எந்த நேரத்திலும் சாடுகிற கும்பலையும் ஏற்படுகிற நெருக்கடியையும் பார்த்தால், 'பணக்கஷ்டம்' 'பணப்புழக்கம் கம்மி' என்று சொல்லவா முடியும் ? தனி நபர்கள் ஆடம்பர அலங்கார வகைகளுக்குச் செய்கிற செலவுகளைக் கவனிக்கையில், பணப் புழக்கம் குறைந்திருக்கிறது என்று சொல்லத்தான் முடியுமா ?

வாசிக்கத் தெரிந்தவர்கள் பத்திரிகைகள் வாங்குவதில் ஆர்வம் கொள்கிறார்கள். புத்தகங்கள் வாங்க விரும்புவதில்லை. இது பெரிய குறைபாடு.

சினிமாவுக்கும் ஓட்டலுக்கும், கணக்குப் பார்க்காமலே, தாராளமாகப் பணம் செலவு பண்ணத் தயாராக இருக்கிறார்கள்,

வசதியுள்ளவர்களும் மத்தியதர வர்க்கத்து ஆண்களும் பெண்களும், இளைஞர்களும். ஆனால், புத்தகங்கள் வாங்குவதற்கு பணம் ஒதுக்க வேண்டும் என்றாலே அவர்களுக்கு மனம் வருவதில்லை ; கை கூசுகிறது.

ஆங்கிலம் படித்த இளைஞர்கள் விலை உயர்ந்த சஞ்சிகைகள் வாங்குகிறார்கள்; சுவாரஸ்யமான ஆங்கிலக் கதைப் புத்தகங்களை நிறையவே வாங்குகிறார்கள். ஆனால், தமிழ் புத்தகங்களை விலை கொடுத்து வாங்கத் தயங்குகிறார்கள். இரவல் பெற்றோ, நூலகங்களில் புத்தகம் எடுத்தோ படித்துக் கொள்கிறார்கள்.

வாங்கும் சக்தி பெற்ற கல்லூரிப் பேராசிரியர்களில் பெரும்பாலோர் சொந்தத்துக்குப் புத்தகங்கள் வாங்குவதற்கு மனம் கொள்வதுமில்லை; பணம் செலவு செய்வதும் இல்லை.

நாட்டு மக்களின் மனநிலை இப்படி இருக்கையில் புத்தக விற்பனை எப்படி அதிகரிக்கும்? புத்தகப் பிரசுரம் தான் நல்ல முறையில் வளர்வது எங்ஙனம்?

நம் நாட்டில் வாசகர்களின் தரம் உயர வேண்டும் என்பது மட்டுமில்லை. அவர்களின் மனப் பண்பும் போக்கும் மாறியாக வேண்டும். புத்தகங்கள் வாங்கும் பழக்கம் பரவலாக வளர வேண்டும்.

1950 கள் 60 களில், தலைவர் சி. என். அண்ணாதுரை மேடை தோறும் கூறி வந்தார்: பத்திரிகைகள், புத்தகங்களை வாங்கிப் படிக்கிற பழக்கம் அதிகமாக வேண்டும். இயக்கத் தோழர்கள் எழுதுகிற நூல்களை எல்லோரும் அவசியம் வாங்க வேண்டும். தாங்கள் வாங்கிப் படிப்பதோடு அமையாது, புத்தகங்களை வாங்கி மற்றவர்களுக்கு

அன்பளிப்பாக வழங்க வேண்டும். திருமணம், புதுமனை புகு விழா போன்ற விசேடங்களுக்கு பணம் அளிப்பதை விட, புத்தகங்களாக வாங்கிப் பரிசளிக்க வேண்டும். இப்படி எல்லாம் செய்வதன் மூலம், புத்தக விற்பனை அதிகரிக்கும் என்பதோடு நமது எண்ணங்கள், சிந்தனைகள், நல்ல கருத்துக்கள் எங்கும் பரவுவதற்கும் வழி ஏற்படும், என்று.

அவர் பேச்சுக்கு நல்ல பலன் இருந்தது. அவருடைய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் புத்தகங்கள் வாங்குவதிலும் படிப்பதிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்கள். ஒரு காலகட்டம் வரை.

புத்தகங்களை வாங்கிப் படிக்கிற விஷயத்தில் மக்களிடையே ஒரு புத்துணர்வும் எழுச்சியும் தேவை.



## 5

---

தற்காலத்தில் பத்திரிகைகள் நிறைய நிறைய வருகின்றன. மேலும் மேலும் புதுப் பத்திரிகைகள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. புத்தகங்களும் வாரம் தோறும், எண்ணிக்கையில் மிக அதிகமாகவே பிரசுரமாகிக் கொண்டிருக்கின்றன.

மேலோட்டமாகப் பார்க்கிற போது நிலைமைகள் சீராக, வளமாக, நல்லபடியாக இருப்பதாகவே தோன்றும். ஆனாலும், அவ்வத் துறைகளில் ஈடுபட்டவர்கள், உண்மைகளை

அறிவிக்கிற போது, நிலைமைகள் சரியாக இல்லை, உற்சாகம் தரக் கூடியனவாக இல்லை என்பது புரியும்.

பத்திரிகைகளில், ஒரு சிலவற்றைத் தவிர, பெரும் பலவும் உயிர் வாழ்வதற்கே திணறிக் கொண்டிருக்கின்றன. ஆரம்பித்து விட்டோமே; நிறுத்தக் கூடாது; நிறுத்துவது கவுரவம் இல்லை என்ற தற்சிறப்பு மோகத்துடனேயே அநேகர் தங்கள் பத்திரிகைகளை தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டிருகிறார்கள்.

பத்திரிகை உலகின் சிரமங்களை, நஷ்டங்களை, ஏமாற்றங்களை தெரிந்து கொண்டிருந்த போதிலும், தங்களால் ஏதோ பிரமாதமாகச் சாதித்து விட முடியும் — தங்கள் பத்திரிகை வெற்றிகரமாகப் போகும் – என்றொரு தன்னம்பிக்கையோடும் தற்பெருமை மயக்கத்தோடும் அநேகர் புதுசு புதுசாகப் பத்திகைகளை ஆரம்பிக்கிறார்கள்.

குறுகிய காலத்திலேயே உண்மை நிலை அவர்களுக்கு அறிவு புகட்டி விடுகிறது. அவர்களுடைய பத்திரிகைகள் காலம் தவறாது வெளிவர இயலாதனவாகி, விரைவிலேயே நின்றும் போகின்றன.

இவ்வளவு பத்திரிகைகளும், இவ்வளவு புத்தக வெளியீட்டு வாய்ப்புகளும் இருப்பதனால், எழுத்தாளர்களின் நிலைமையும் முன்னை விட இப்போது மேம்பட்டிருக்க வேண்டும் என்ற நினைப்பே பலருக்கும் எழக் கூடும்.

மேலும், கவர்ச்சிகரமான பரிசுத் திட்டங்களும் விருது வழங்கல்களும் இருக்கின்றனவே !

ஒவ்வொரு வருடத்திலும் குறிப்பிட்ட காலத்தின் சிறந்த புத்தகம் என ஒன்று தேர்வு செய்யப்பட்டு, அதன் ஆசிரியருக்கு விருது வழங்குவதை சாகித்திய அகாடமி வழக்கமாகக் கொண்டிருக்கிறது. முன்பு 5,000 ரூபாய் சன்மானம் வழங்கியது. 1983 லிருந்து இத் தொகை பத்தாயிரம் ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

அதே போல, ஒவ்வொரு வருடமும் ஒரு சிறந்த நாவலுக்கு — அல்லது, ஆராய்ச்சி நூலுக்கு — பத்தாயிரம் ரூபாய் அளித்து வந்த ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நினைவுப் பரிசு அமைப்பு, அத் தொகையை இருபதாயிரம் ரூபாயாக உயர்த்தியிருக்கிறது.

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஆண்டு தோறும் ஒரு சிறந்த இலக்கியப் படைப்புக்கு ஒரு இலட்சத்து ஒரு ரூபா பரிசாக வழங்கி, அதை எழுதிய படைப்பாளியின் பணியை கவுரவித்துப் பாராட்டுகிறது.

கோவையில் கஸ்தூரி சீனிவாசன் ரங்கநாயகி நினைவுப் பரிசு என்ற அமைப்பு வருடம் தோறும் ஒரு நல்ல நாவலை தேர்வு செய்து, அதை எழுதியவருக்குப் பத்தாயிரம் ரூபாய் வழங்குகிறது.

சென்னை 'இலக்கியச் சிந்தனை' மாதம் தோறும் அந்த மாதத்திய சிறந்த சிறுகதை என ஒன்றை தேர்வு செய்து, அதை எழுதியவருக்கு ஐம்பது ரூபாய் அன்பளிப்பு தருகிறது. ஒரு வருடம் நிறைந்ததும், அப் பன்னிரண்டு கதைகளில் சிறந்தது என்று ஒன்றை தெரிவு செய்து, அதை எழுதியவருக்கு ஐநூறு ரூபாய் பரிசு அளிக்கிறது. அந்த பன்னிரண்டு கதைகளையும் தொகுத்து புத்தகமாக

வெளியிடுகிறது. இந் நற்பணியை ' இலக்கியச் சிந்தனை ' பதினேழு வருடங்களாகத் தொடர்ந்து செய்து வருகிறது.

அதே ' இலக்கியச் சிந்தனை ' சமீப சில வருடங்களாக, ஒவ்வொரு வருடமும் நல்ல நாவல் ( அல்லது நாடகம், ஆய்வு நூல், வாழ்க்கை வரலாறு, கவிதை - நூல் ) ஒன்றை தெரிந்தெடுத்து, அதன் படைப்பாளிக்கு ஐயாயிரம் ரூபாய் அன்பளிப்பு தருகிறது. ( அநேகமாக இது ஒரே எழுத்தாளருக்கு வழங்கப்படுவதில்லை. பல வருடங்களில், மிகச் சிறந்த நாவல் தங்கள் பார்வைக்கு வரவில்லை என்பதால், பரிசுத் தொகையை இரண்டு புத்தகங்களுக்குப் பகிர்ந்து அளிக்கிறோம் எனக் கூறி, 2500 ரூபாய் வீதம் இரண்டு படைப்பாளிகளுக்கு வழங்கி விடுகிறார்கள். )

இவை போக, வெளி மாநிலங்களில் உள்ள சில அமைப்புகள் அவ்வப்போது தமிழ்ப் படைப்பாளிகளுக்கும் பரிசு வழங்குவதை தங்கள் செயல் திட்டங்களில் ஒன்று ஆகக் கொண்டுள்ளன.

மேலும், தமிழக அரசுப் பரிசுகள் வேறு: திரு. வி. க. நினைவுப் பரிசு பத்தாயிரம் ரூபாய்; கவி பாரதிதாசன் பரிசு பத்தாயிரம்; தமிழ் வளர்ச்சிக்கு வகை செய்கிற புத்தகத்துக்கு இரண்டாயிரம் ரூபாய் என்று பல புத்தகங்களுக்குப் பரிசு —

இவற்றை எல்லாம் எண்ணினால், தமிழ் எழுத்தாளர்களின் நிலைமை, பொறாமைப்பட வேண்டிய அளவுக்கு, வெகுவாக முன்னேறி விட்டது என்றே சந்தோஷப்பட வைக்கும்.

இவை மகிழ்ச்சிக்கு உரிய விஷயங்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆயினும், நடைமுறையில், இவை எல்லாம் தூரத்து வெளிச்சங்கள் தான். பல, விளம்பர வெளிச்சங்களும் கூட.

பரிசுகளுக்கு உரிய படைப்புகளும் நபர்களும் தேர்ந் தெடுக்கப்படுவதில் குறைபாடுகள் உண்டு. தேர்வு செய்கிறவர்களின் விருப்பு வெறுப்புக்கள், குறுகிய நோக்குகள், அரசியல் கட்சி சார்புகள் போன்ற பல புற மற்றும் உள் காரணங்கள் வேலை செய்யவும் கூடும். மேலும் ஸ்தாபனங் (அமைப்பு) களின் செயல் முறைகள், பரிசுத் திட்ட விதிகள் ஆகியவற்றிலும் குறைகள் உள்ளன.

இவை போன்ற காரணங்களினால், விருதுகள் - பரிசு கள் வழங்கப்படுதல்களில் எப்போதும் குறைகள் இருந்து கொண்டே இருக்கும். இது பொது நியதி.

உலகத்தின் மிகச் சிறந்த பரிசு என்று மதிக்கப்படுகிற 'நோபல் பரிசு, வழங்கப்படுவதிலே கூட ஏகப்பட்ட குறைபாடுகள், விருப்பு வெறுப்புகள் உள் நோக்கங்கள், மறைமுகச் செயல்கள், அரசியல் காரணங்கள் எல்லாம் வேலை செய்கின்றன என்று கண்டனக் குரல்கள் காலம் தோறும் எழுகின்றன. இவ் உண்மைகளை ஆதாரமாகக் கொண்டு, ஆர்தர் ஹெய்லி என்ற எழுத்தாளர்—சுவாரஸ்யமான நாவல்கள் பல எழுதிப் புகழ் பெற்றவர்-'தி பிரைஸ்' என்ற நாவலை எழுதியிருக்கிறார். நோபல் பரிசு சம்பந்தமான அநேக உண்மைகளை அது வெளிச்சப்படுத்துகிறது.

எந்த நாட்டிலும், எந்த மொழியிலுமே, உண்மையான தகுதி – திறமை - உழைப்பு உரிய கவனிப்பைப் பெறுவதில்லை, உரிய முறையில் கவுரவிக்கப்படுவதில்லை ; அவற்றைப் பெற்றுள்ளவர்களுக்கு நியாயம் வழங்கப் படுவதில்லை என்ற குறை கூறல் காலகாலமாக இருந்து வருகிறது. இப்பவும் நிலைமைகள் மாறிவிடவில்லை.

விருதுகளும் பரிசுகளும், கவுரவிப்புகளும் பாராட்டுதல் களும், திறமையாளர்களுக்கும் உண்மையான உழைப்பாளர் களுக்கும் உந்துதல்களாக இருக்கலாம். ஆனால், அவற்றுக்காக அவர்கள் உழைப்பதில்லை. அவை வந்து சேர்ந்தாலும் சேராவிட்டாலும், திறமை உடையவர்கள், – உழைப்பிலே இன்பம் காண்கிறவர்கள் – தங்களுக்கு உழைக்கும் சக்தி இருக்கிற வரையில் உழைத்துக் கொண்டே இருப்பார்கள்.

உண்மைகளைத் தேடிக் காண வேண்டும் – கண்டறிந்த உண்மைகளை பிறர் அறியக் கூற வேண்டும் – என்பதற்காக அவர்கள் எழுதிக் கொண்டிருப்பார்கள். சமூகம் விழிப்படையவும், மக்கள் மேம்பாடு பெறவும் அவர்கள் தங்களது சிந்தனையையும் எழுத்தாற்றலையும் பயன்படுத்துவதில் சந்தோஷம் காண்பார்கள்.

பேரறிஞர் பெர்னட்ஷா சொன்னர் - 'அறிவு வெளிச்சம் பரப்புவதற்காக நான் சிந்தனைத் தீப்பந்தத்தை உயர்த்திப் பிடித்தபடி எழுத்து உலகில் பிரவேசித்தேன். என் உயிர் உள்ளவரை, எனது உடலில் உழைக்கும் தெம்பு இருக்கிற வரை, அந்த ஒளிப் பந்தத்தைக் கீழே போடமாட்டேன். அதை உயரத் தூக்கிப் பிடித்தவாறு முன்னே முன்னே செல்வேன்.'

இதுவே மனிதநேயம் உடைய, சிந்தனைத் திறன் படைத்த, எழுத்தாளர் ஒவ்வொருவரின் இதய ஒலியாக அமைதல் வேண்டும்.

பத்திரிகைத் துறையிலும் புத்தக உலகிலும் எழுத்து வாழ்க்கையிலும் நிலவுகிற பிற்போக்குத் தன்மைகளும் குறைபாடுகளும் அதிகமாக இங்கே சொல்லப்பட்டிருக்கின்றன. இளைய எழுத்தாளர்களுக்குத் தயக்கமும் அச்சமும் உண்டாக்க வேண்டும் என்பதற்காக அல்ல.

எழுத்துத் துறையில் ஈடுபடுகிறவர்கள், முன்னேற விரும்புகிறவர்கள், போலியான நம்பிக்கையும் பொய்யான எதிர்பார்த்தல்களையும் வளர்த்துக் கொண்டு, வெகு விரைவிலேயே சோர்வும் விரக்தியும் அடைந்து, எழுதுவதையே விட்டு விடக் கூடாது; உண்மை நிலைமைகளைப் புரிந்து கொண்டு மனோதிடத்துடன் உழைக்க வேண்டும். இந்த எண்ணத்துடனேயே இவை கூறப்பட்டுள்ளன.

எந்தத் தொழிலை, துறையை, வாழ்க்கை முறையை எடுத்துக் கொண்டாலும், எங்கும் குறைபாடுகள், துன்பங்கள், சிரமங்கள், ஏமாற்றங்கள், தோல்விகள் உண்டு. அவற்றை எதிர் கொண்டு, ஏற்று, போராடி, வாழ்க்கையில் வெற்றி காண வேண்டும்.

வாழ்க்கையே ஒரு சவால் தான். அதில் எதிர்ப் படுகின்றவற்றை வரவேற்று, சமரிட்டு, வெற்றி பெறுவதே திறமை ஆகும். உழைப்பு அதற்குத் துணை புரியும். தன்னம்பிக்கை உந்து சக்தியாக இருக்கும்.

பால்சாக் என்ற உலகப் புகழ் பெற்ற பிரஞ்சு எழுத்தாளன் மிகுந்த வறுமை நிலையில் வாழ்ந்தான். எனினும், எழுத்திலுல் உலகத்தை வெல்வேன், வரலாற்றுப் புகழ் பெறுவேன் என்ற நெஞ்சுறுதி அவனுக்கு இருந்தது. அவன் அமர்ந்து எழுதும் இடத்தில், பார்வையில் படுகிறபடி, 'உலகத்தை வாளினால் வென்றான் நெப்போலியன்; பேனாவினால் நான் வெல்வேன்' என்று எடுப்பாக எழுதி வைத்திருந்தான். எழுத உட்காரும் போது அதை மந்திரம் போல் உச்சரித்துக் கொண்டு உழைத்தான். மாபெரும் வெற்றி கண்டான்.

அது தான் 'ஸ்பிரிட்' — மெய்த்துணிவு; உள் வேகம்; உண்மையான ஊக்கம் ஆகும்.

'உள்ளம் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்
பள்ளம் உயர் மேடாகாதோ?
பாறை பொடியாய் போகாதோ?'

'ஊன்றி உணர்தற்கு உரிய உண்மை' என்று ஒரு கவிஞர் குரல் கொடுக்கிறுர் இப்படி.

வாழ்க்கைப் பாதையில் முன்னேற விரும்புகிற ஒவ்வொருவரின் இதய ஒலியாக இது அமைதல் நன்று.



Printed at SCTP - PRESS Christianpet.